இந்திய இலக்கியச் சிற்பிகள்

# திரிகூடராசப்பக்கவிராயர்

ஆ. முத்தையா

சாகித்திய அகாதெமி

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# திரிகூடராசப்பக்கவிராயர்

ஆ. முத்தையா

சாகித்திய அகாதெமி

*Thrikooda Rasappa Kavirayar.* : Monograph in Tamil by A. Muthiah, Sahitya Akademi, New Delhi 2005, Rs. 25



முதல் பதிப்பு 2005

ISBN 81-260-2087-3

**சாகித்திய அக்காதெமி**

இரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை,
புது தில்லி 110001.

**விற்பனை**

'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி 110 001.

மத்தியக் கல்லூரி வளாகம், பல்கலைக்கழக நூலகக் கட்டடம்,
டாக்டர் அம்பேத்கார் வீதி, பெங்களூர் 560 001

குணா பில்டிங்ஸ், 443, அண்ணாசாலை, தேனாம்பேட்டை,
சென்னை 600 018

ஜீவன் தாரா பில்டிங், 4ஆவது மாடி,
டைமண்ட் ஹார்பர் சாலை, கல்கத்தா 700 053

172, மும்பய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை,
தாதர், மும்பய் 400 014

விலை: ரூ. 25

அச்சகம் : சரிதா பிரிண்டர்ஸ், சென்னை - 600 014.

# பொருளடக்கம்

# குற்றாலத்தின் சிறப்பு

குற்றாலம் என நினைப்போர்க்கு அளவில்லாத பாவங்களும் தீரும். திருக்குற்றாலம் என்று ஒரு முறை சொன்னால் அளவற்ற புண்ணியங்கள் சேரும். குற்றாலத்தில் இருந்து செய்யும் தவம் பல கோடியாக வளரும். அங்கு சென்று இறைவனைக் கண்டு தொழப் பெறுவோர்க்குப் பரமபதம் கிடைக்கும்.

*"குறறாலம் என்றொருக்கால் நினைப்பவர்க்குப் பாவமொரு கோடி தீரும்*
*குற்றாலம் என்றொருக்கால் உரைப்பவர்க்குப் புண்ணியங்கள் கோடி சேரும்*
*குறறாலம தனிலிருநது செய்யுமொரு தவமனந்த கோடியாகும்.*
*குற்றாலம் கண்டு தொழக் கூடினார்க்கே பரமபதம் கூடுமாதோ."*

( திருக்குற்றாலத் தலபுராணம்-தலமகிமைச் சருக்கப் பாடல் -34)

# முகவுரை

மதுரை தியாகராசர் கலைக் கல்லூரி புலவர் விழா ஆராய்ச்சிக் கட்டுரைப் போட்டி மதுரைப் பல்கலைக்கழக அளவில் 1969 ஆம் ஆண்டு நடைபெற்ற பொழுது அந்த ஆண்டிற்குரிய புலவராகத் திரிகூட ராசப்பக் கவிராயர் அறிவிக்கப்பட்டிருந்தார். அந்தப் புலவர் திலகத்தின் படைப்புக்களை முழுமையாக ஆய்வு செய்ய முனைந்த பொழுதுதான் அப்புலவர் பெருமான் ஒரு தமிழ்க்கடல் என்றுணர்ந்தேன் அத்தமிழ்க் கடலில் மூழகி முடிந்த வரை முத்துக்களை எடுத்து வந்து போட்டியில் முதற் பரிசைப் பெற்றேன். தமிழ் முதுகலை மாணவப் பருவத்தில் அது மிகப் பெரும் மதிப்பினை எனக்கு ஈட்டித் தந்தது.

"இத்துணை சிறப்புப் பெற்ற திரிகூடராசப்பக்கவிராயர் தமிழகத்தில் குடத்திலிட்ட விளக்காகவே இருக்கின்றார். கவிராயரின் புலமைத்திறனும், சைவப்பற்றும், குன்றிலிட்ட விளக்காக ஆக்கப்பெறல் வேண்டும். தமிழகத்து அறிஞர் பெருமக்களும், சைவச் சான்றோர்களும் இவ்வகையில் ஒல்லும் வகையில் பல்லாற்றானுங் கடனாற்றுதல் வேண்டும் எனப் பணிவோடு வேண்டுவன்" என்று பரிசு பெற்ற அந்த ஆய்வுக் கட்டுரையினை நான் முடித்திருந்தேன்.

முப்பது ஆண்டுகளுக்குப் பின் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் கல்வியாளர் மேம்பாட்டுக் கல்லூரி இயக்குநராகப் பணியாற்றிய பொழுது உலகின் மிகப்பெரிய வெளியீட்டகமான சாகித்திய அகாதெமி, குடத்திலிடப்பட்ட விளக்கைக் குன்றின் மேலிட்டு ஒளி வீசிடச் செய்யும் அரிய வாய்ப்பை எனக்கு நல்கியது திரிகூட ராசப்பக் கவிராயர் என்னும் புலவர் திலகத்தின் புகழினை இந்திய நாடு முழுவதும் எடுத்துரைக்கும் இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசையில் சிற்றிலக்கியங்கள் படைப்பதில் சிகரமாக விளங்கிய திரிகூடராசப்பக் கவிராயரின் புலமைத் திறத்தைப் புலப்படுத்தும் சிறந்த வாய்ப்பினை எனக்கு நல்கியது.

தமிழும தமிழர் நலனும் சைவமும் காக்கப்பட வேண்டும் என சிவபெருமானிடம் வேண்டும் அத்தமிழ் நெஞ்சத்தின் படைப்புகளின் சிறப்பினைப் புலப்படுத்துவதில் நான் மிகவும் பெருமிதம் அடைகிறேன்.

இயல், இசை, நாடகம் என முத்தமிழுக்கும் தொண்டு செய்த அச்செந்தமிழ்ச் செல்வரைச் சிறப்பிக்கும் பெரும் பேற்றினை எனக்கு

வழங்கிய சாகித்திய அகாதெமியினர்க்கு என் நெஞ்சம் நிறைந்த நன்றியைத் தெரிவிப்பதில் நான் பெருமகிழ்வு கொளகிறேன்.

இந்நூல் சிறந்த முறையில் உருவாகப் பல்வேறு கருத்துக்களை வழங்கி உதவிய செம்மொழிச் செம்மல் தமிழணணல் ஐயா அவர்களுக்கு என் அன்பான நன்றி என்றும் உரித்தாகுக!

மதுரை காமராசர் பல்கலைக்கழக ஒப்பிலக்கியத்துறைத் தலைவர் இரா. மோகன் அவர்களும்,அவரது துணைவியார் முனைவர் திருமதி நிர்மலா மோகன் அவர்களும் இந்நூல உருவாகிடப் பெரிதும் காரணமாக இருந்தார்கள். அத்தமிழ் நெஞ்சங்களுக்கு என் அன்புகெழுமிய நன்றி என்றும் உரித்தாகுக!

திரிகூட ராசப்பக் கவிராயர் வழித் தோன்றலும் காரைக்குடி அழகப்பா கலைக்கல்லூரி முன்னை முதல்வருமான மே.சொ சுப்பிரமணியக் கவிராயர் அவர்களின் அன்பு நெஞ்சத்தை மறக்க முடியுமா? அவரது முன்னோர் பற்றிய தகவல்களைத் தெரிவித்ததோடு பழம் பதிப்பாகிய திருக்குற்றாலத் தல புராணம் போன்ற நூல்களையும் எனக்கு வழங்கினார்கள். திருநெல்வேலி இந்துக் கல்லூரித் தலைமைத் தமிழாசிரியாக இருந்த இவரது தாத்தா மே சொ. சுப்பிரமணியக் கவிராயர் அவர்கள் ஆங்கில அரசர் எட்டாம் எட்வர்டு அவர்களிடமிருந்து சிறந்த தமிழ்ப் புலவர்களுக்குரிய கிலதததுப் பரிசாகப் பொறகடகமும் சால்வையும் பெற்ற தகவல்களைக் கூறியதோடு, அந்த வரலாற்றுச் சிறப்புமிக்க சால்வையை என்னிடம் கொடுத்துப் பார்க்கச் சொன்ன அத்தமிழ் நெஞ்சத்திற்கு என் அன்பும் நன்றியும் என்றும் உரித்தாகுக!

இந்நூல் செம்மையாக உருவாகக் காரணமான என் இனிய நண்பர்கள் பேராசிரியர் மு. பழனி இராகுலதாசன், பேராசிரியர் க. முத்துச்சாமி ஆகிய இருவருக்கும் என் நெஞ்சம் நிறைந்த நன்றி என்றும் உரித்தாகுக!

இந்நூலினை விரைவாக எழுதப் பலநிலைகளில் என்னைத் தூண்டிய என் வாழ்க்கைத் துணைவி டாக்டர் செயத்திற்கும், இந்நூலின் கையெழுத்துப் படிகளை நகல் எடுத்து உதவிய டாக்டர் ஆ.மு. ஆனந்த் மதுரை மருத்துவக் கல்லூரி மாணவர் ஆ.மு.கவின் அமுதன் ஆகியோருக்கும், இந்நூலாக்கத்திற்கு உதவிய ஏனைய பிற அன்பு நெஞ்சஙகளுக்கும் இத்தருணத்தில் என் மனம் கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

**ஆ.முத்தையா**

மேலூர்
2-6-2005

# முன்னுரை

## சிற்றிலக்கியப் பின்னணி

**ச**ங்க கால இலக்கியங்களாகிய பத்துப் பாட்டிலும் எட்டுத்தொகையிலும் உள்ள பாடல்கள் அகம், புறம் என இருவகைகளாகப் பிரிக்கப் பெற்றன சங்கம் மருவிய கால நூல்கள் மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என வகுக்கப் பெற்றன. பின்னர் தோன்றிய இலக்கியங்கள் பெருங்காப்பியம், சிறுகாப்பியம் என பெயரிடப் பெற்றன அடிகளால் மிகுந்து பொருள்களால் சிறந்து மக்கள் வாழ்வை ஒட்டி அவர்தம் வாழ்வைச் செம்மைப்படுத்தி இன்பம் நல்கத் தோன்றியன எல்லாம் பெருங் காப்பியங்கள் எனப்பட்டன. அவை சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி போன்றவை ஆகும். அடிகளால் குறைந்து, கற்பனை மிகுந்து, கடவுளர்களையும், செல்வர்களையும் தலைவர்களாகக் கொண்டு எழுந்தன எல்லாம் சிறுகாப்பியங்கள் ஆகும். இதனை,

> *''அறமுத னான்கினுங் குறைபா டுடையது*
> *காப்பிய மென்று கருதப் படுமே''*

என வரும் தண்டியலங்காரப் பத்தாவது நூற்பா கவினுற விளக்கும் இந்நூற்பாவிற்குரிய விளக்க உரையில் ''அறம், பொருள், இன்பம், வீடெனும் நான்கினுள் ஒன்றும் பலவும் குறைந்து வருவது காப்பியமென்று கருதப்பெறும்''எனக் கூறப்பட்டுள்ளது மேலும் ''காப்பியமெனினும் சிறுகாப்பியம் எனினும் ஒக்கும்'' எனவும் கூறி உலா, மடல், பிள்ளைத்தமிழ் முதலியன என விளங்க உரைத்துள்ளனர். இச்சிறுகாப்பியத்தையே அறிஞர் பெருமக்கள் வடமொழியில், 'பிரபந்தம்' என்றும் தமிழில் 'சிற்றிலக்கியம்' என்றும் குறிப்பர்

டாக்டர் உ.வே.சாமிநாத ஐயர் அவர்கள் தாம் பதிப்பித்த திருக்குற்றாலச் சிலேடை வெண்பாவில் ''புதியனவாகத் தோன்றிய பிரபந்த வகைகளுள் சிலேடை வெண்பாவும் ஒன்று'' என்று கூறி இருக்கிறார். ஆகவே புதிய இலக்கியங்கட்குப் பழைய பன்னிரு பாட்டியலில் குறிப்புக் காணப் பெறவில்லை என்பது தெளிவாகும். பின்வந்த இலக்கண ஆசிரியர்கள் சிற்றிலக்கியங்களைக் கோவை, உலா, பரணி, தூது, பிள்ளைத் தமிழ், அந்தாதி, கலம்பகம், குறவஞ்சி, பள்ளு,

மடல், மாலை, எனப் பலவகைகளாகப் பகுத்தனர். இவ்வகையான சிற்றிலக்கியங்களைத் தொல்காப்பியர் ''விருந்து'' என்பதில் அடக்கலாம என்பா

*''விருந்தே தானும்*
*புதுவது கிளந்த யாப்பின் மேற்றே''*

(பொருள-551)

என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கு உரை வகுத்த பேராசிரியர், 'புதுவது கிளந்த யாப்பின் மேற்று' என்ற தென்னையெனின், புதிதாகத் தாம வேண்டியவாற்றாற் பல செய்யுளுந் தொடர்ந்து வரச் செய்வது. அது முத்தொள்ளாயிரமும், பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளுமென உணர்க. கலம்பகம் முதலாயினவுஞ் சொல்லுப' என்று தந்திருக்கும் விளக்கம் புலவர்கள் தாம் வாழும் காலத்துப் புதிதான இலக்கிய வகைகளைப் படைத்துக் கொள்ளலாம் என்ற குறிப்புத் தோன்ற அமைந்திருத்தலைக் காணலாம்.

பிற்கால இலக்கியக் கலை வடிவங்கள் அதுவரை மன்னர்களைப் பற்றியும் கடவுளர்களைப் பற்றியும் பாடி வந்த நிலையை மாற்றி மண்ணின் மைந்தர்களாகிய மருதநிலத்து மள்ளர்களைப் பற்றியவை பள்ளு இலக்கியங்களாகவும், குறிஞ்சி நிலத்துக்குரிய குறிஞ்சியர்களாகிய குறவர்களின் வாழ்க்கைச் சித்திரங்கள் குறவஞ்சி இலக்கியங்களாகவும் வடிக்கப்பட்டன. படித்தவர் ஒருசிலரின் ஏட்டுச்சுவடிகளில் அதுவரை சிறைப்பட்டிருந்த தமிழை மீட்டுத் தமிழ்ப்புலவர்கள் மண்ணின் மைந்தர்கள் பற்றிப் பாடி மக்கள் இலக்கியங்களாக மாற்றி அவ்விலக்கியங்களைத் தமிழர்களிடையே உலவவிட்டனர் இதனைத் தான் ''தம்மை ஆதரிக்கக் கூடிய மன்னர்கள் இல்லாததால் சாதாரண மக்களிடம் திரும்ப வேண்டிய சூழ்நிலை புலவர்களுக்கு ஏற்படுகின்றது'' என்று பேராசிரியர் தெ பொ. மீனாட்சி சுந்தரனார் கூறுகிறார்.

அதற்கேற்ப சாதாரண மக்களாகிய பள்ளர்களும் குறவர்களும் இலக்கியங்களில் தலைமை இடம் பெறத் தொடங்கி விடுகின்றனர் குறவஞ்சியும் பள்ளும் தெய்வங்களையும் மன்னர்களையும் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டிருப்பினும் அவை குறவருக்கும் பள்ளருக்குமே சிறப்பிடம் நல்குவதைக் காணலாம்.

இத்தகைய இலக்கியச் சூழலில் தோன்றிய திரிகூடராசப்பக் கவிராயர் பல்வேறு சிற்றிலக்கியங்களைப் படைத்து தமிழ் இலக்கிய வரலாற்றில் தனக்கென ஒரு தனி இடத்தைப் பிடித்துள்ளார்

# 1
# வாழ்வும் பணியும்

இன்றைக்கு முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் திருநெல்வேலி மாவட்டம் திருச்சீவரமங்கை (நாங்குனேரி) வட்டம் விசயநாராயணம் என்னும் ஊரில் திரிகூடராசப்பக் கவிராயர் சைவ வேளாளர் குலத்தில் தோன்றினார். அவ்வூருக்கு அருகில் உள்ள சிற்றூரில் அவர்தம் குலதெய்வமாகிய ஐயனாரின் திருப்பெயரால் இராசப்பன் எனப் பிள்ளைத் திருநாமம் இடப் பெற்றார்.

விசயநாராயணத்தில் இராசப்பனுடைய குடும்பம் வாழ்வதற்குரிய சூழ்நிலை இல்லாததால் அங்கிருந்து சுமார் அறுபது மைல்கள் கடந்து 'சித்திராநதி' அருகில் தென்காசிக்கும் திருக்குற்றாலத்திற்கும் இடையிலுள்ள 'மேலகரம்' என்னும் சிற்றூருக்குத் தம் தாயாருடன் இளமையிலேயே சென்றுவிட்டார் மேலகரத்தில் உள்ள நந்தவனம் எனப்படும் பூந்தோட்டத்தில் உள்ள சிறிய குடிசையில் தங்கிக் கொண்டு திருக்குற்றால நாதர் கோவிலுக்குப் பூமாலை தொடுத்து அளித்தும உழவாரப் பணி செய்தும் இறைத் தொண்டுகள் புரிந்து வந்தார்.

திருக்குற்றால நாதருக்குப் பூமாலை கொண்டு வந்த சிறுவன்முன் இறைவன் முனிவர் வடிவில் தோன்றி இராசப்பன் நாவில் பிரணவ மந்திரத்தை எழுதி "பூமாலை தொடுத்து வந்த நீ எம் மீது பாமாலை பாடுக" என்றருளிச் சென்றார் என்ற செய்தி இன்றும் அவர் மரபினரிடம் நிலவுகிறது.

பூமாலை கொண்டு வந்த சிறுவனாகிய இராசப்பனைத் தவறுதலாகக் கோயிலுள் வைத்துப் பூட்டி விட்டனர் என்றும், இரவு முழுவதும் தனித்திருந்து பயந்து அழுது கொண்டிருந்த சிறுவன் முன் தோன்றி இறைவன் அருள புரிந்ததாகவும் கூறுகின்றனர் இக்கதைகள் குறித்து திரிகூடராசப்பர் திருக்குற்றால மாலையில் சில பாடல்களில் குறிப்பிடுகின்றார் திருக்குற்றால மாலை 27வது பாடலில்

*".......எனை என்று செஞ்சொற்*
*பன்னென்று சொன்னபடி போலவுள்ளபடி"*

என்றும் 93வது பாடலில்,

*"......உன்னைத்*
*தனது பட்டாதிக்கம போல தமிழ்க்கவிசாற்றுவதும்*
*உனது கட்டாயத் தொழில்காண் குற்றாலத்துறைபவனே"*

என்ற பாடல் வரிகளால், அவனருளால், அவன்தாள் பாடிய செய்தி புலப்படுத்தப்படுகிறது

இறைவன் அருளால் பாடிய கவிஞரின் இசைப்பாடலில் மயங்கிய, நல்ல பாம்பொன்று படம் விரித்து ஆட, அப்பாம்பின் படத்தில் குத்தியிருந்த முள்ளினை திரிகூடராசப்பக் கவிராயர் தம் கையில் எடுத்து பாம்பின் துன்பத்தைப் போக்கினார். துன்பம் நீங்கிய பாம்பு, கவிஞருக்கும், கவிஞர் குடும்பத்தினருக்கும் பாம்புகளால் என்றும் தீங்கு வராது என்று அருள் புரிந்ததாகவும் அன்று முதல் இன்று வரை அக் குடும்பத்தினர் யாரும் பாம்புகளால் எந்தப் பாதிப்புக்கும் ஆளானதில்லை என்றும் சொல்லப்படும் செய்தி வியப்பினைத் தருகின்றது

திரிகூடராசப்பக் கவிராயரின் இலக்கியப் படைப்புகள் வாயிலாக அவரின் வாழ்க்கை பற்றிய உண்மையை உணரலாம். மதுரை மன்னன் முத்துவிசயரங்கச் சொக்கநாத நாயக்கர் வழங்கிய குறவஞ்சி மேட்டுச் செப்புப் பட்டயத்தில் 'ராஜப்பக்கவிராஜர்' என்று காணப்படுகிறது. ராசப்பன் என்பது கவிராயர் பிறந்த ஊரில் அமைந்துள்ள ஐயனாரின் பெயர் எனபதால் கவிஞரின் இயற்பெயர் ராசப்பன் என்று முடிவு செய்யலாம். கவிராயர் என்பது மதுரை மன்னரால் குறவஞ்சி நாடகம் பாடியதால் மகிழ்ந்து கொடுக்கப்பட்ட சிறப்புப் பட்டம் ஆகும். திரிகூட முதல் வனையும் அவரின் திரிகூடத்தையும் புகழ்ந்து அவர் பல்வேறு இலக்கியங்கள் படைத்தளித்ததால் திரிகூடம் என்பது அவருடைய பெயரின் முன் சேர்ந்து திரிகூடராசப்பக் கவிராயர் எனப் பெயர் திகழ்வதாயிற்று. அவர் மேலகரத்தில் தான் தொடர்ந்து தங்கியிருந்தார் என்பதை படைப்புகள் அனைத்திலும் மேலகரம் செண்பக விநாயகரை வணங்கித் தொடங்கியதலிருந்து அறியலாம்.

'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்ற சமயச் சான்றோரின் நன்மொழிக்கேற்பவே நமது கவிராயர் அவர்களும் திருக்கோயிற் பணிபுரியும் கோயிற் கொத்தைச் சார்ந்திருந்து கொத்தடிமையாக அருட்தொண்டாற்றியவர் என்பதை,

*"கிள்ளை மொழிக் கொச்சை கிளி வளர்த்தோர் தாமி கழார்*
*பிள்ளை மழ லைகககிகழார் பெற்றெடுத்தோர் - வள்ளைக்*
*குழைபாகர் குற்றாலர் கொத்தடியேன் புன்சொல்*
*விழைவாகக் கொண்டருள்வார் மேல்"*

(காப்புச் செய்யுள்-5)

என்ற பாடலால் அறியலாம். அப்பாடலில் வரும் 'கொத்தடியேன்' என்ற சொல்லுக்கு 'திருக்கோயிற் பணிவிடை செய்வோருள் ஒருவனாகிய அடியேனது' என்று டாக்டர் உ.வே.சா விளக்கம் தருவதைக் காணலாம். திரிகூடராசப்பரும்,

*"முற்றும் இனிக் கொத்தடியேன்"*

என்று உரைப்பதால் அவர் தம் உறுதிப்பாட்டையும் காணலாம்.

*"நித்தர்கள் போற்று நின்னாவணி மூலத்திநெல்லை வந்து*
*முத்தமிழ் பாடக் கருணை செய்தாண்டனை முற்றுமினிக்*
*கொத்தடியேனுக்குன் பொற்பதந்தாகுழல் வாய்மொழியாள்*
*உத்தமி பாகமுவந்தாய் குற்றாலத்துறைபவனே"*

(பாடல் - 100)

என்ற பாடலால் இறைவன் அருளால் முத்தமிழ் பாடி அவரின் கொத்தடிமையாக இருந்தார் என்பது தெளிவாகும். இறைவனுக்கு கொத்தடிமையாகப் பணி செய்து வந்த திரிகூடராசப்பக் கவிராயர் அப்பணிக்கு தினம் கைக்கூலி வாங்கும் கவியாக இருந்தார் என்பதையும்,

*"........முன் கொடுத்த*
*கடன்போல் அனுதினங் கைக்கூலி வாங்குங்கவி"*

(பாடல்-30)

என்ற திருக்குற்றால மாலை வரிகளால் உணரலாம்.

கோயில் திருப்பணிபுரியும் காலத்தே சைவசமயக் கல்வியில் பயிற்சியும் இலக்கிய, இலக்கணங்களில் புலமையும் பெற்ற திரிகூட ராசப்பக்கவிராயர் குற்றாலநாதர் மீது சிற்றிலக்கியங்கள் படைக்கும் சீர்மையும் பெற்றார் இவரது படைப்பில் காணும் சொல்லாட்சியும் பொருட்செறிவும் மெய்ப்பாடுகளும் இசையமைப்பும் ஈடிணையற்றவை என்பதைக் கேள்விப்பட்டு அக்கால பாண்டிய நாட்டை ஆண்ட விசய ரங்கச் சொக்கநாத நாயக்கர் என்பார் (கி.பி. 1706-1732) குற்றாலக் குறவஞ்சி என்னும் நூலைப் பாடித்தருமாறு பணித்தார். அவர் விரும்பி யவாறே குற்றாலக் குறவஞ்சியை இயற்றி 1718-இல் இப்புலவர் பெருமான் குற்றாலநாதர் முன்னிலையில் அரங்கேற்றம் செய்தார். அதனால் மகிழ்ந்த அரசர் குற்றாலத்தருவி அருகிலுள்ள மேலச் சண்பகக் காவில் கருப்புக்கட்டி ஊத்து மேட்டில் கவிஞருக்குத் தேவையான சிறந்த தண்ணடையான 52 ஏக்கர் நன்செய் நிலத்தை வாரம் வரியின்றி முற்றூட்டாக வழங்கி அதனை ஒரு செப்பேட்டில் பொறித்து மன்னர் பெருமான் தெலுங்கில் கையொப்பமிட்டுக் கொடுத்தார். 'குறவஞ்சிமேடு' என்று பெயரிட்ட நிலப்பகுதியைக் கொடுத்தது மட்டுமின்றி "திருக்குற்றால நாதர் கோயில் வித்துவான்" என்ற சிறப்புப் பட்டப்பெயர் சூட்டிப் பாராட்டினார்

திரிகூடராசப்பரால் குற்றாலக குறவஞ்சி பாடப்பெற்றமையான் கிடைத்த அந்நிலத்திற்குக் 'குறவஞ்சி மேடு' எனப் பெயரிடப்பெற்றது அந்த நிலத்திற்குரிய செப்பேட்டின்படி குறவஞ்சி மேடு இன்றும் அவர் மரபினரிடம் இருந்து வருகின்றது. அச்செப்பேட்டுச் செய்திகள் வருமாறு.

## குறவஞ்சி மேட்டுச் செப்புப்பட்டயம்

> *''சாலிவாகன சகாப்தம் 1640-க்குச் செல்லா நின்ற கொல்லம் 891 ஆம் வருடம் தை மாதம் 11 ஆம் நாள் ராஜமானிய ராஜ ஸ்ரீ முத்து விஜய ரெங்க சொக்கநாத நாயக்கரவர் களோம்; திருக்குத்தாலம் ராஜப்பன் கவிராஜருக்குப் பொறுப்புப் பட்டயம் எழுதிக் கொடுத்தபடி சுவாமி திருக்குத்தால நாத சுவாமி பேரில் குறவஞ்சி நாடகம் பாடி அரங்கேற்றினதற்கு மேலச் செண்பகக்காவில் கருப்புக்கட்டி ஊத்து மேட்டில் ஐம்பத்திரண்டு ஏக்கர் அளவுள்ள நஞ்சை நிலம் முழுவதையும் விட்டுக் கொடுத்த படியினாலே பொறுப்பு வருடம் ஒன்றிற்குத் தீர்வை... வீதம குடுத்து கையாடிக் கொண்டு சன்னதி பிரபந்த வித்துவானாக நடந்து வருவாராகவும் இந்த நிலத்துக்கு வேறே வரி, நாட்டுச் சிலவு, காவல் கூலி, போர் நெல் குடுக்கத் தேவையில்லை யென்று கட்டளையிட்ட படியினாலே இந்த படிக்குக் கையாடிக் கொள்ளவும்.''*

கையொப்பம் (தெலுங்கில்) ஸ்ரீராமசெயம்

இவ்வாறெழுதி அக்காலத்து முத்திரையும் போடப்பட்டிருக்கிறது.

மதுரை மன்னர் தந்த செப்புப்பட்டயம் இப்பொழுது திருவனந்தபுரம் அருங்காட்சியகத்தில் உள்ளது.

''பாண்டிய நாட்டை 207 ஆண்டுகள் ஆண்ட பதின்மூன்று மன்னர்களில் தமிழ்ப்புலவரை ஆதரித்து நிலம் வழங்கியவர் முத்து விசயரங்க சொக்கநாதர் (கி.பி 1706-1732) ஒருவர் மட்டுமே ஆவர்'' என்று மதுரை நாயக்கர் வரலாறு என்ற நூலில் அ.கி. பரந்தாமனார் கூறியிருப்பதைக் கவனத்தில் கொண்டால் திரிகூடராசப்பரின் சிறப்பை நாம் உணர்ந்து கொள்ள இயலும்.

திரிகூடராசப்பர், தாயுமான சுவாமிகள் காலத்தவர் என்று கூறப்படும் கருத்தையும் நாம் கவனத்தில் கொள்ளல் வேண்டும தாயுமான சுவாமிகளின் காலத்தைப் பற்றி குறிப்பிடவந்த வரலாற்றறிஞர் டாக்டர். கே கே பிள்ளை அவர்கள் தாயுமான சுவாமிகள் விசயரங்க சொக்கநாத

நாயக்கன் (1706-1732) காலத்தவர் என்று தம்முடைய 'தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்' என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் தாயுமானவரின் காலம் 1706-1744 எனக் கூறியிருப்பதோடு, பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த புலவர்கள் வரிசையில் தாயுமான சுவாமிகட்கு அடுத்து, திரிகூடராசப்பக் கவிராயரைப் பற்றியும், அவர் குறவஞ்சி பாடியமைக்காகப் பரிசு பெற்ற செய்தியையும் குறித்திருப்பதால் திரிகூடராசப்பக் கவிராயரின் காலம் பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதி என்பது தெளிவாகும்.

டாக்டர் உ.வே. சாமிநாத ஐயரவர்கள் தாம் 1940-ஆம் ஆண்டில் பதிப்பித்த திருக்குற்றாலச் சிலேடை வெண்பா என்னும் நூலில் "இந்நூல் பதினேழாம் நூற்றாண்டின் இறுதியிலும் பதினெட்டாம் நூற்றாண்டின் முதலிலும் விளங்கிய மேலகரம் திரிகூடராசப்பக் கவிராயர் என்னும் புலவர் திலகரால் இயற்றப்பட்டது'' என்ற குறிப்பினை நோக்க திரிகூடராசப்பக் கவிராயர் காலத்தை நாம் உறுதி செய்யலாம்.

அருள் நாட்டத்தில் ஈடுபட்டு கோயிற் திருப்பணி செய்த திரிகூடராசப்பக் கவிராயர் அவர்களின் திருமகனார் பண்டாரக் கவிராயரும் சிவ நேசச் செல்வராய் விளங்கினார். பண்டாரக் கவிராயர், "வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபு'' என்னுந் திரு அருட்பா அடிகளுக்கிணங்க திருக்குற்றாலத்தைச் சார்ந்த "இலஞ்சி'' என்னும் சிற்றூரில் எழுந்தருளியுள்ள திருவிலஞ்சி முருகன் மீது ஓர் உலாப் பாடியுள்ளமை கவிராயர் தம் மரபு வழிப் பெருமையையும் சிறப்பையும் காட்டும்.

திரிகூடராசப்பக் கவிராயரின் வழித் தோன்றல்களில் நான்காம் தலைமுறையில் குற்றாலலிங்கக் கவிராயர் என்ற இயற்பெயரை உடையவராய் இருந்தவருமான திருவாவடுதுறை ஆதினம் பதினாராவது பட்டம் தவப்பெருந்திரு சுப்பிரமணிய தேசிகர், திருநெல்வேலி இந்துக் கல்லூரி தலைமைத் தமிழாசிரியரும் இங்கிலாந்து மன்னர் எட்டாம் எட்வர்டு வேல்ஸ் இளவரசராய் இந்தியா வந்த பொழுது 1922ஆம் ஆண்டு சிறந்த தமிழறிஞருக்கான கிலத்துப் பரிசாகப் பொற்கடகமும் சால்வையும் பெற்றவருமான மே.சொ. சுப்பிரமணியக் கவிராயர், அவரின் பெயரரும் காரைக்குடி அழகப்பா அரசு கலைக்கல்லூரி முதல்வருமான முன்னை முனைவர் சொ. சுப்பிரமணிய கவிராயர் ஆகிய மூவரும் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்

வேல்ஸ் இளவரசர் எட்டாம் எட்வர்டு அவர்களிடமிருந்து தம் தாத்தா கிலத்துப் பரிசாகப் பெற்ற பொற்கடகமும் சால்வையும் தம்மிடமே

இருப்பதாக சொ. சுபபிரமணியக் கவிராயர் குறிப்பிட்டார். கவிராயரிடம் நூலாசிரியர், அவற்றைக் காண இயலுமா எனக் கேட்க, பொற்கடகம் பாதுகாப்புப் பெட்டகத்தில் உள்ளதாகவும் ஆண்டுக்கொருமுறை ஆயுதபூசை அன்று எடுத்து வந்து நூல்களோடு அப்பொற்கடகத்தையும் வைத்து வழிபாடு செய்வதாகவும் சொ சுப்பிரமணிய கவிராயர் குறிப்பிட்டார்.* சிறப்பிற்குரிய அந்தச் சால்வையை நூலாசிரியர் கைகளில் கவிராயர் கொடுத்தார். வரலாற்றுச் சிறப்புமிக்க சித்திர வேலைப்பாடுகள் நிறைந்த அந்தச் சிவப்பு வண்ணச் சால்வையை நூலாசிரியர் தம் கைகளில் ஏந்திக் கண்களில் ஒற்றிக் கொண்ட நிகழ்ச்சி நெகிழ்ச்சி மிக்கது ஆகும்

கடவுள் பணிக்கென்று தம்மை ஒப்படைத்துக் கொண்டவர்கள் கடவுளைத் தவிரப் பிறரைப் பாடக்கூடாது என்ற மரபை மீறிப் பரிசு வழங்கிய வேல்ஸ் இளவரசரைப் போற்றிப் பாடியதால் சில நாட்களிலேயே மே.சொ. சுப்பிரமணிய கவிராயர் அவர்கள் உடல் நலம் குன்றிப் பேச இயலாமல் மயங்கிக் கிடந்து மறைந்து போனார் என்ற அவலச் செய்தி நம் நெஞ்சைத் துயரத்தில் ஆழ்த்தும் தன்மையது ஆகும்.

இந்துக் கல்லூரியில் தமிழ்ப்பணி புரிந்த சுப்பிரமணிய கவிராயர் திரிகூடராசப்பக் கவிராயரின் 'யமக அந்தாதி' என்ற நூலுக்கு முழுமையான சிறந்த பொழிப்புரை எழுதி வழங்கியதைப் போலவே அவரது பெயரராகிய முனைவர் சுப்பிரமணிய கவிராயர் அவர்களும் தம் முன்னோர் போற்றி வழிபட்ட திருக்குற்றால நாதர் கோயிலைப் பற்றி ஆய்வு செய்து ''திருக்குற்றாலநாத சுவாமி கோயில் வரலாறும் பண்பாடும்'' என்ற சிறந்த நூலினை வெளியிட்டுத் தமிழ்ப் பணிபுரிந்து வருகின்றார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

---

* நேர்காணல பேட்டி நாள். 30 12 2003 மாலை 6.00 மணி

# 2
# நூல்கள்

திரிகூடராசப்பக் கவிராயரின் வழித்தோன்றல்களில் சிறப்புப் பெற்றவரான மே.சொ. சுப்பிரமணிய கவிராயர் அவர்களின் முயற்சியாலும் திருக்குற்றாலநாத சுவாமிகள் திருக்கோயில் அறங்காவலர்கள் திருவாளர்கள் சுப்பிரமணிய பிள்ளையவர்கள், குற்றால லிங்கமுதலியாரவர்கள், இராமசாமிப்பிள்ளையவர்கள் ஆகிய மூவரின் நிதியுதவியுடனும் குற்றாலத் தல புராணத்தின் இரண்டாவது பதிப்பு, முதற் பதிப்பு வெளியான நாற்பது ஆண்டுகளுக்குப் பின் ஆங்கில ஆண்டு குறிப்பிடப்படாமல் தமிழ் சாதாரண ஆண்டு, ஆவணி மாதம் வெளியாயிற்று. மதுரை தமிழ்ச்சங்கத்து நூற்பரிசோதகரும் சிறந்த தமிழறிஞருமான மு.ரா. அருணாசலக் கவிராயரின் அரும்பத உரையுடன் அந்நூல் வெளியாயிற்று. அப்பதிப்பில் 'நூலாசிரியர் வரலாறு' என்னும் பகுதியில் திரிகூடராசப்பக் கவிராயரின் படைப்புக்களாகிய சிற்றிலக்கியங்கள் பதினான்கு என்று குறிப்பிடப்பெற்றுள்ளது.

## ஆசிரியர் நூல்கள்

திருக்குற்றாலத் தலபுராணம் இரண்டாவது பதிப்பில் குறிக்கப்பெறும் நூல்கள் பதினான்கின் பெயர்கள் வருமாறு:

1.குற்றாலக் குறவஞ்சி

2. குற்றாலத் தலபுராணம்

3 குற்றால மாலை

4 குற்றாலச் சிலேடை வெண்பா

5. குற்றால யமகவந்தாதி

6. குற்றால நாதர் உலா

7. குற்றால ஊடல்

8. குற்றாலப் பரம்பொருள் மாலை

9. குற்றாலக் கோவை

10 குழல்வாய்மொழி கலிப்பா மாலை

11. குழல்வாய்மொழி கோமளமால்லை

12. குழல்வாய்மொழி வெண்பாவந்தாதி

13. குழல்வாய்மொழி பிள்ளைத்தமிழ்

14 நன்னகர் வெண்பா

தலபுராணப் பதிப்பில் மொத்த நூல்களின் எண்ணிக்கை பதினான்கு என்று குறிப்பிடடு, நூலின் பெயரும் தெளிவாகத் தரப்பட்டிருத்தலால் கவிராயர் அவர்கள் தண்டமிழ்த் தாய்க்குச் சூட்டிய மாலையின் பூக்கள் பதினான்கு என்று கணக்கிடப் பட்டுள்ளதை அறியலாம்

''திருக்குற்றாலத் தல வரலாறு'' என்னும் புத்தகத்தில் ''பிரபந்த வித்துவான் பட்டம் பெற்றவரும், நன்செய் நிலம் இனாமாகப் பெற்றவருமான மகாகவி திரிகூடராசப்பக் கவிராயர் இயற்றிய நூல்கள் பதினான்கு''(14) என வரும் தொடரால் கவிராயர் எழுதிய நூலகள் பதினான்கு என்றும் கூறப்பட்டுள்ளது.

மேலே குறிப்பிடப்பெற்ற பதினான்கு நூல்களுள் திருக்குற்றாலத் தலபுராணம் என்னும் நூலும் அடங்கியுள்ளது. ஆனால் டாக்டர் உ.வே.சாமிநாத ஐயரவர்கள் தரும் செய்தியோடு ஒப்பிட்டு நோக்குங்கால் கவிராயர் அவர்கள் எழுதிய மொத்த நூல்கள் பதினைந்து ஆகும் என்றே தோன்றுகிறது

''திருக்கோயிற்கொத்தில் ஒருவராகிய திரிகூடராசப்பக் கவிராயர் இத்தல விஷயமாகப் பதினான்கு பிரபநதங்களும் ஒரு புராணமும் பாடியிருக்கின்றனர் அவற்றுள் புகழ்பெற்று விளங்குவன குறவஞ்சியும் புராணமுமேயாம்'' என்று உ.வே.சா அவர்கள் கூறுகிறார் எனவே அவரின் கூற்றுப்படி சிற்றிலக்கியங்கள் பதினான்கும், ஒரு புராணமுமாக கவிராயரின் மொத்த நூல்கள் பதினைந்து எனக் கருத வாய்ப்புள்ளது

ஆயின், அப்பதினைந்தாம் நூல் என்ன நூல் என்பதும் ஆராயத்தக்கது. அதோடு உ.வே.சா அவர்களால் 'புராணம்-புகழ் பெற்ற புராணம்' எனக் குறிக்கப்படுவது எந்த நூல் என்பதையும் காண வேண்டும் ஐயரவர்களாலேயே ''இத்தல விஷயமாகப் பதினான்கு பிரபந்தகளும், ஒரு புராணமும் பாடியிருக்கின்றார். '' என்றும் அது 'புகழ் பெற்ற புராணம்' என்றும் குறிக்கப்படுகின்றது. மேலும் 'புராணம்' என்ற பெயரில் கவிராயரின் நூல்கள் வேறு இல்லை என்பதையும் நோக்க வேண்டும்.

எனவே பதினான்கு பிரபநதங்கள் தவிர தனியே குறிக்கப் பெற்ற புராணம் திருக்குற்றாலத் தலபுராணமே என்பது பெறப்படும்.

டாக்டர் உ.வே சாமிநாத ஐயரவர்கள் தரும் குறிப்பிலிருந்து 'தலபுராணம்' என்னும் நூல் நீங்கிய ஏனைப் பிரபந்தங்களின் எண்ணிக்கை பதினான்கு என்பது தெளிவாகும். ஆனால் கழகப் பதிப்பு வெளியீட்டையும், கோயிலார் வெளியீட்டையும், கலைக் களஞ்சியம் ஐந்தாம் தொகுதி தரும குறிப்புக்களையும் காண்கின்ற போது குறிப்பிட்ட பதினான்கு நூல்களுக்குள் ஒன்றாகத் தலபுராணமும் கொள்ளப்படுகின்றது தல புராணம சேர்ந்த பிரபந்தங்கள் பதினான்கு என்பதை ஏற்றுக் கொண்டால், உ வே.சா. அவர்களின் குறிப்பின்படி ஒரு சிற்றிலக்கிய நூல் நமக்கு கிடைக்கவில்லை என்னும் முடிவுக்கு வருவதே ஏற்புடையது.

டாக்டர் உ வே.சாமிநாத ஐயரவர்கள் தம் ஆசிரியராகிய மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களிடம் பாடம் கேட்டு வரும் போது குற்றாலத் தலத்திற்குரிய இன்னொரு சிலேடை வெண்பாவாகிய ''நன்னகர் சிலேடை வெண்பா'' என்னும் நூலின் பிரதி ஒன்று மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களுக்குக் கிடைத்தது. அதனை அவர்கள் ஆராய்ந்து பாடம் சொன்னார்கள்.

திரிகூடராசப்பக் கவிராயரின் வழித்தோன்றல்களில் ஒருவராகிய சண்பகக் குற்றாலக் கவிராயர் என்பவர் பிள்ளையவர்களிடம் பாடம் கேட்டுக் கொண்டிருந்தார். ''பிள்ளையவர்கள் காலத்திற்குப்பின் அவர்தம் வீட்டில் இருந்து மேற்கூறிய பதினான்கு பிரபந்தங்களும் தனித்தனியே எழுதி இருந்த ஏட்டுப் பிரதிகளைக் கொணர்ந்தார். ..நானும் அவரும் சேர்ந்து அவற்றை ஆராய்ந்து பொருள் வரையறை செய்து கடிதத்தில் சுத்தப்பிரதி ஒன்று பண்ணி வைத்துக் கொண்டோம் அந்தப் பிரதி சண்பகக் கவிராயரிடம் இருந்தது அவர் காலத்துக்குப்பின் அது திருநெல்வேலி ஹிந்து காலேஜில் தமிழாசிரியராக இருந்த ஸ்ரீ மே சொ. சுப்பிரமணிய கவிராயரிடமிருந்து அப்பால் கடையம் ஸ்ரீ. கே.எஸ். வைத்தியலிங்கம்பிளளையவர்களிடம் சென்றதாகக் கேள்வியுற்றேன். இப்போது அது சென்ற விடமே தெரியவில்லை '' என்று வருத்தத்துடன் தனது திருக்குற்றாலச் சிலேடை வெண்பா முகவுரையில் உ.வே சா. அவர்கள் குறிப்பிடுகிறார்கள். உ.வே.சா. அவர்களின் ஆசிரியராகிய திருமிகு மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களுக்குக் கிடைத்து அவர் உ.வே.சா. அவர்களுக்குப் பாடம் சொல்லிய பின் அதன் பிரதி உ.வே.சா. அவர்களுக்கு கிடைத்தும் அந்நூல் அச்சிடப்பெற்று தமிழகத்திற்குக் கிடைக்காமல் போனது தமிழகம் செய்த தவக் குறையே ஆகும்.

புராணம் என்றது திருக்குற்றாலத்தலபுராணமே ஆகும் என்பது தெளிவாகின்றது இத்தலத்திற்குரிய மற்றொரு சிலேடை வெண்பாவின் பெயர் 'நன்னகர்ச சிலேடை வெண்பா' என்பது என்று உ.வே.சா அவர்கள் திருக்குற்றாலச சிலேடை வெண்பா முகவுரையில தெளிவாகக் குறிப்பிடுவதால அந்தப் பதினைந்தாவது சிற்றிலக்கியத்தின பெயர் 'நன்னகர்ச் சிலேடை வெண்பா' தான் என்று உறுதியாகச் சொல்லலாம். திருக்குற்றாலத தல புராணத்தின் இரண்டாவது பதிப்பில் பதினான்காவது நூலாகக் குறிக்கப் பெற்ற நன்னகர் வெண்பா, திருக்குற்றால நன்னகர் வெண்பா என்று திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்தப் பதிப்பாக வெளியான, ''குற்றாலக் குறவஞ்சி'' என்ற நூலில் குறிப்பிடப் பெற்றுள்ளது. எனவே உ.வே.சா. குறிப்பிட்ட நூல் வேறு, கழகப் பதிப்பில் சொல்லப்படும் நூல் வேறு என்பது தெளிவாகின்றது

இதுவரை கொடுக்கப் பெற்ற சான்றுகளால் திரிகூடராசப்பக் கவிராயர் அவர்களின் படைப்புகள் மொத்தம் பதினான்கு என்பதை விட பதினைந்து என்பதே ஏற்றுக் கொள்ளத்தக்க செய்தி என்பது புலனாகின்றது.

எனவே திரிகூடராசப்பக் கவிராயரின் படைப்புக்களாகிய பதினைந்து நூல்கள் வருமாறு

1. திருக்குற்றாலக் குறவஞ்சி
2. திருக்குற்றாலத் தல புராணம்
3. திருக்குற்றால மாலை
4. திருக்குற்றாலச் சிலேடை வெண்பா
5. திருக்குற்றால யமகவந்தாதி
6. திருக்குற்றால நாதர் உலா
7. திருக்குற்றால ஊடல்
8. திருக்குற்றாலப் பரம்பொருள் மாலை
9. திருக்குற்றாலக் கோவை
10. திருக்குற்றால நன்னகர் வெண்பா
11. குழல்வாய்மொழி கலிப்பா மாலை
12. குழல்வாய்மொழி கோமள மாலை
13. குழல்வாய்மொழி வெண்பா அந்தாதி
14. குழல்வாய்மொழி பிள்ளைத் தமிழ்
15. நன்னகர்ச் சிலேடை வெண்பா.

படைப்புப்பல படைத்தளித்த பாவலர் திரிகூடராசப்பரின் நூல்களில் ஒன்பது மட்டுமே திருக்குற்றால நாதர் கோயில வெளியீடாக அச்சிடப் பெற்று நமக்குக கிடைத்துள்ளன. அதிலும் திருக்குற்றாலக் கோவைப் பாடலகள் சிலவே கிடைத்துள்ளன. எஞ்சிய ஆறு நூல்களும் சிவபெருமானுக்கும், குழல்வாய்மொழியம்மைக்கும் கிடைத்தாலும் தமிழகத்திற்குக் கிடைக்காதது வேதனைக்குரிய ஒன்றாகும்.

தமிழர்கள் தமிழ் நூல்களைப் போற்றிப் பேணிப் பாதுகாக்க மாட்டார்கள் என்பதை முன்னரே உணர்ந்ததால்தான் திரிகூடராசப்பக் கவிராயர் சிவபெருமானை நோக்கி,

*"பவனத் தமிழுஞ் சைவ வேடமுங் காப்பது நின் கடன்"*

(யமக அந்தாதி பாடல் 95)

என்று முறையிடுகின்றார்.

## திருக்குற்றாலக் குறவஞ்சி

திரிகூடராசப்பக் கவிராயரின் "கவிதைக் கிரீடம்" என்று போற்றப்பட்ட நூல் திருக்குற்றாலக் குறவஞ்சியாகும். ஆசிரியரின் படைப்பாற்றல் முழுவதும் வெளிப்பட்டிருப்பதும் இக்குறவஞ்சியில்தான். பதினெட்டாம் நூற்றாண்டில் படைக்கப்பட்ட இலக்கியங்களில் எத்தனை வகைகள் உண்டோ, எத்தனை வடிவங்கள் உண்டோ, அத்தனை வகைகளிலும் வடிவங்களிலும் இலக்கியம் படைத்துச் சுடர் விட்டவர் திரிகூடராசப்பர் ஆவார்.

திருக்குற்றால நாதரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு எழுதப்பட்ட குறவஞ்சியாதலின் இது திருக்குற்றாலக் குறவஞ்சி எனப் பெயரிடப் பெற்றது. பாண்டிய நாட்டை ஆண்ட விஜயரங்கச் சொக்கநாத நாயக்கர் விரும்பியதற்கிணங்கவே குறவஞ்சியைத் திரிகூடராசப்பக் கவிராயர் பாடி அரங்கேற்றினார்.

திரிகூடராசப்பக் கவிராயர் அவர்தம் காலத்து வழங்கிய நாட்டுப்புற இசை நுணுக்கங்களை எல்லாம் சிந்தாமல் சிதறாமல் சேகரித்து இலக்கிய வடிவத்தில் கலந்து தந்த இசைக் களஞ்சியமே குற்றாலக் குறவஞ்சியாகும். ஆடலும் பாடலும் கலந்து இசை நாடகமாக அவை மலர்ந்த போது மக்கள் மகிழ்வுடன் ஏற்று, போற்றிப் புகழ்ந்தனர்.

குற்றாலக்குறவஞ்சியின் தனிச்சிறப்பு அதனுடைய இசை, நாடக அமைப்பேயாகும். பிற்காலத்தில் எழுந்த குறவஞ்சிகளுக்கெல்லாம் இக்குறவஞ்சியே வழிகாட்டியாக அமைந்தது எனலாம்

எனவே பின்னர் தோன்றிய குறவஞ்சிகளான துரோபதை அம்மன் குறவஞ்சி, மின்னொளியாள் குறவஞ்சி போன்றவற்றில் திரிகூடராசப்பரின் குற்றாலக் குறவஞ்சியில் வரும் இசைவடிவங்களே பயின்று வருவதைக் காணலாம்.

குறவஞ்சியின் தோற்றத்தின் சாயல் சங்க இலக்கியத்திலேயே காணப்பெறுகின்றது 'குறம்' எனவும் 'குறத்திப்பாட்டு' எனவும் வழங்கிய நூல்வகையே குறவஞ்சி நாடகமாக விரிவுற்றது. குறத்தி குறிசொல்வதை அடியொற்றிய வளர்ச்சியே என்பதற்கான சான்றாகச் சங்க காலத்துக் 'கட்டுவிச்சி' குறி கூறுவதனை எடுத்துக்காட்டுவர்.

குறுந்தொகையில்,

*''அகவன் மகளே அகவன் மகளே*
*மகவுக் கோப்பன்ன நன்னெடுங் கூந்தல்*
*அகவன் மகளே பாடுக பாட்டே''*

(பாடல் -23)

என்று வரும் பாட்டில் அகவன் மகளென்பாள் குறிசொல்லுகின்ற கட்டுவிச்சியாவாள். எனவே தொன்மைக் காலத்தின் குறிசொல்லும் முறையே வளர்ந்து நாடக இலக்கியமாக மலரும் நிலைக்கு உயர்ந்தது என்பதில் ஐயம் இல்லை.

ஒல்காப் பெரும்புகழ் தொல்காப்பியத்தின் கண்ணேயும் கட்டுவிச்சி பற்றிய குறிப்பைக் காணலாம். தொல்காப்பியம் நச்சினார்க்கினியத்தில் ''கட்டுவிச்சியும் வேலனும் தாம் பார்த்த கட்டினானும் கழங்கினானும் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்யாக்கால் இம்மையில் தீராதென்று கூறுதலின் அவ்விருவருந் தம்மின் ஒத்த திறம்பற்றியதனையே செய்யுஞ் செய்தியிடத்தும்....'' என்று தரும் குறிப்பே சான்றாகும்.

குற்றாலக் குறவஞ்சி ஆசிரியப்பா, வெண்பா, தரவு, கொச்சகம் கலித்துறை, ஆசிரியவிருத்தம், கலிவிருத்தம் போனற இயற்றமிழ்ச் செய்யுட்களுடன், சிந்து, கீர்த்தனை, கண்ணிகள் போன்ற இசைப் பாடல்களும் விரவி வருமாறு அமைந்துள்ளது. சொல் அழகு, பொருளழகு, இனிய ஓசை நயம், எதுகை, மோனை முதலிய தொடை வனப்பும், உலகவழக்குச் சொற்களும் கலந்தமைந்து குறவஞ்சி கற்போர்க்கு நல்விருந்து அளிக்கின்றது.

திருக்குற்றால நாதர்பால் காதல் கொண்ட வசந்தவல்லி எனும் தலைவிக்கு குறத்தி குறி சொல்வதாக இந்நாடகம் அமைந்துள்ளது. குற்றால நாதர் பவனி காணவந்த மகளிர் பலரும் ஓடோடி வந்தனர். அவருள் அழகுப் பெட்டகமாய் பெண்ணுக்குப் பெண் மயங்கும்

பேரழகியாய் பநதாடிக் கொண்டிருந்த வசந்த வல்லியும் ஓவியம் போல் ஒய்யாரமாய் நடந்துவந்தாள் இருண்ட மேகம் போன்ற கூநதலும் நெஞ்சைச் சூறையாடும் விழிக்கெண்டையை உடையவளும் ஆகிய வசந்தவல்லி குற்றால நாதரைக் கண்டு மோகம் கொண்டாள்.

*"மோகம் என்பதும் இது தானோ இதை*
*முன்னமே நான் அறிவேனோ?"*

என்று கலங்கிய காரிகையின் மேனியில் தோழியர் பூசிய சந்தனக் குழம்பு நெருப்பாய் எரித்தது. வெண்ணிலா குளிராமல் வேதனையைத் தந்தது. தோழியரிடம் சொல்லி தூது அனுப்பினாள். இந்நிலையில் வளையல்கள் அணிந்த வனிதையாகிய குற்றாலக்குறவஞ்சி, வசந்தவல்லியின் காதல் நோய் தீர்க்கும் சஞ்சீவி மருந்து போல் வந்து சேர்ந்தாள்

வசந்தவல்லியிடம் தன்னுடைய திரிகூடமலைவளம் நாட்டுவளம் ஆகியவற்றை உரைக்கின்றாள். வசந்தவல்லி குறவஞ்சியை நோக்கி,

*'இலவுக்குஞ் சிவந்த வாயால் எனக்கொரு குறி சொல்வாயே'*

என்று கேட்கின்றாள். எக்குறியாகிலும் இமைப்பினில் உரைக்கும் மைவிழிக் குறவஞ்சி 'செல்லப் பூங்கோதையே நீ பந்தடிக்கும் போது அவனைக் கண்டு மோகம் கொண்டாய்' என்றுரைத்தாள். பேரைச் சொல்லடி என்று கேட்க, பேரை திரிகூடநாதன் என்று செப்பலாமே என்றுரைத்தாள். உடனே வசந்தவல்லி நாணித் தலை கவிழ்ந்தாள் புன்னகையோடு பொன்னகைகளைக் குறவஞ்சிக்குப் பூட்டி மகிழ்வோடு அனுப்பி வைத்தாள்

குறவஞ்சியைத் தேடி அவளின் கணவன் ஆகிய குறவன் வருகிறான். மனைவி குறவஞ்சியை எண்ணிய ஏக்கத்தால் அவனால் வேட்டைத் தொழிலில் வெற்றி காண இயலவில்லை. தொடர்ந்து அவளையே எண்ணிப் புலம்பித் தவிக்கின்றான். குறவஞ்சியின் எழிலைச் சிறப்பித்து,

*"கறுப்பில் அழகியடா! -என்சிங்கி*
*கறுபபில் அழகியடா"*

என்றும்,

*"நகையும் முகமும் அவள் நாணையக் கைவீச்சும்*
*பகைவருந் திரும்பிப் பார்ப்பாரடா"*

என்றெல்லாம் குறவஞ்சியின் எழிலைத் தன்தோழனிடம் எடுத்துரைத்துத் தவித்தான். பின்னர் எழிலரசியாகிய காமச்சிங்கியைக் கண்டு மகிழ்ச்சிக் கூத்தாடுகின்றான். பொன்னணி பூண்டு வந்த குறவஞ்சியிடம் நகைகளைப்பற்றி கேட்கின்றான். அவள் பதிலைக் கேட்டு மனநிறைவு கொள்கின்றான். இறுதியில் குற்றாலநாதரை வணங்கி வழிபட்டு

குறவஞ்சியும் குறவனும் ஆடிப்பாடி மகிழ்வதோடு நாடகம் இனிதே நிறைவேறுகின்றது.

## திருக்குற்றாலத் தலபுராணம்

புராணம் என்பது வெறுங்கட்டுக்கதைகள் நிரம்பியது என்ற எண்ணம் பலரிடம் பரவியுள்ளது. ஆனால் தமிழ்த் தென்றல் திரு.வி.க. அவர்கள் ''புராணம் என்பது பழைய வரலாறு எனப் பொருள்படும்'' என்கிறார். பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளையும். ''சமயத்தொடர்பு உள்ள கதைகள், அரசர், முனிவர், உலகத்தின் தோற்றம். ஒடுக்கம் என்பவைகளைப் பற்றியும் கூறுமிடத்துப் புராணம் எனப் பெயர் பெறும்'' என்று விளக்குகின்றார்.

தமிழ் இலக்கிய வரலாற்றில் பல புராணங்கள் உள்ளன. பெருஞ்சிறப்புப்பெற்றது பெரிய புராணம் ஆகும். சேக்கிழாரது பெரிய புராணத்தின் பின் எழுந்த புராணங்கள் யாவும் இறைவன் எழுந்தருளியுள்ள தலங்களைப் போற்றியே எழுந்தன. திருக்குற்றாலநாதர் எழுந்தருளிய தலம் பற்றித் திருகூடராசப்பக்கவிராயரால் பாடப்பெற்ற தலபுராணமே திருக்குற்றாலத் தலபுராணமாகும்.

திருக்குற்றாலத்தில் வாழ்ந்து வந்த சிவமறையோர் அக்காலத்தில் அவரோடு சிவத்தொண்டு புரிந்து வந்த அருட்கவி திரிகூடராசப்பக் கவிராயரை குற்றாலத்தின் சிறப்பினைத் தமிழில் உணர்த்தும்படி வேண்டிக்கொண்டதற்கு இசைந்து இயற்றப்பட்டதே திருக்குற்றாலத் தலபுராணம் என்பதை,

*''தென்மொழியா வகுத்து நீ யுணர்த்துகெனத்*
*திடமொழியா ல்அத்தலத்துச் சிவமறையோர் பணிந்தருள''*

(பாடல் 8)

என்ற தலபுராணப் பாடல் வரிகளால் அறியலாம்.

திருக்குற்றாலத் தலபுராணத்தின் மூல பாடம் முதற்பதிப்பு கி.பி 1869 ஆம் ஆண்டிலும் இரண்டாம் பதிப்பு கி.பி.1910 ஆம் ஆண்டு ஆவணி மாதத்திலும் வெளியிடப்பட்டன. இந்நூலின் நோக்கம் பற்றி நூல்வழி என்னும் முகவுரையில் ஆசிரியர் குறிப்பிடுகின்றார். ''யான் கல்வியின் கேடில்விழுச் செல்வமாம் தன்மையைத் தெரிவிக்கும் முறையில் இத்தலபுராணமாகிய செல்வியை மக்கள் முன் நிறுத்துகின்றேன்; அவளுக்குத் திருவுரு சிவநெறியே ஆகும். அவள் இரண்டு கண்களே இரண்டு காண்டங்களாகிய பெரும் பிரிவுகள் ஆகும். முப்பத்திரண்டு சருக்கங்கள் அவள் தன் இலக்கணத்திற் குறைவுபடாத அழகும். வனப்பும்

உள்ள உறுப்புக்கள்; ஆங்காங்கு உள்ள துதிகள் அவள் தன் அணிகலன்கள், இவள் கற்பவர், கேட்பவர் ஆகியோருக்கு இம்மை, மறுமை, வீடு என்னும் விழுப்பயன் மூன்றையும் அளித்து அருள்வாள்'' என்ற கருத்துள்ள பாடலைக் காணலாம்.

*''ஒருமைபெரு சிவநெறியே வடிவ மாக*
*உபையகாண் டமுங்கருணைப் பார்வை யாக*
*அருமைதெரி தருசருக்க முறைமை யெல்லா*
*மவயவங்க ளாகமதி யணிந்த பெம்மான்*
*கருது கீர்த் தனங்களணி கலன்க ளாகக*
*கற்பவர்கேட் பவர்க்கிருமைக் கதியும் வீடுந்*
*திருவருள்செய் குற்றாலச் சிவபு ராணச்*
*செல்விகல்வி யுருமகிமை தெரிக்கின் றேனால்''*

(பாடல்-11)

இலக்கியப் பண்பும் கற்பனை நயமும் பொருள் வளமும் நிரம்பிய இத்தலபுராணத்தின் கண் இரண்டாயிரத்து எழுபத்திரெண்டு பாடல்கள் உள. மற்ற புராணங்களினின்றும் இத்தல புராணத்தை வேறுபடுத்திக்காட்டி இதனுடைய இன்றமிழ்ச் சுவையை அறிந்த அறிஞர் பெருமக்கள் ''மற்ற புராணங்களைப் போலன்றி இது 'இனிய' தல புராணம் ஆகும்'' எனக்கூறிப் புகழ்ந்தனர். இந்நூல் குற்றாலத்து அருவிகளின் பழுதில் பெருஞ்சிறப்பையும், தலத்தின் மாண்பினையும், தலத்துறை இறைவன் குற்றாலநாதர் சிறப்பையும் சித்திர சபையில் எழுந்தருளியிருக்கும் கூத்தப் பெருமானின் மருவில் மாண்பையும், குற்றாலத் திருநாட்டின் வளத்தை மேம்படுத்தி தருமமிகு வேளாண்மை செய்யும் மள்ளர் மாண்பினையும் இன்றமிழில் இனிய முறையில் எடுத்தியம்புகின்றது.

தான வைபவ காண்டம், சிவரகசிய காண்டம் ஆகிய இரண்டு காண்டங்களாக இத்தல புராணம் படைக்கப்பட்டுள்ளது. இரண்டு காண்டங்களும் பல சருக்கங்களாக அமைக்கப்பட்டுள்ளன. சித்திரா நதி, திருநாடு, திருநகர், புராண வரலாறு, திரிகூடமலை, திருத்தலம், வடவருவி, சிவமதுகங்கை, மூர்த்தி, பராசக்தி, குறும்பலா, மந்தமாருதம், தக்கன்வேள்வி, அதன் அழிவு, தேவர்கள் சிவத்துரோகமடைதல், அவர் பாவந்தீர்தல், நரியும் வேடனும் வலம் வருதல், யானை செய்த பூசை என்னும் பதினெட்டும் தானவைபவ காண்டம் என்ற முதற்காண்டத்தில் விளக்கப்பட்டுள்ளன.

உமை திருவவதாரம், திருமணம், திருமால் சிவனாதல், சிவ பூசை முறை, பாவியாகிய வேடன் கதி பெற்றது, வானவர் வழிபட்டது, குடமுனிவர் வழிபட்டது, வாசுகி தவம்புரிதல், இறைவன் திருநடம்,

கண்டகசேதனன், கவுற்சனன், புட்பகந்தன், தருமசாமி என்போர் கதிபெற்றது நூற்பயன் என்னும் பதினான்கும் இரண்டாவதாகிய சிவரகசிய காண்டத்தில் கூறப்பட்டுள்ளன.

இத்தலபுராணத்தில் புராணச் செய்திகள் மிகுதியாக வருதல் காணலாம். சிவபெருமானின் அருட்செயல்களும், அகத்தியரை சிவன் தென்னாட்டிற்கு அனுப்பிய செய்தியும் சொல்லப்படுகின்றன. குற்றாலத்துத் திருமால் கோட்டத்தில் அகத்தியருக்குச் சிவபெருமான் திருமால் வடிவு கரந்து சிவலிங்க வடிவம் பெற்றுத் திருக்குற்றாலப் பெருமானாகக் காட்சியளித்த செய்தியைப்.

*"பருவளை ஆழி ஏந்திப் பங்கயக் காடு பூத்த*
*கருணையங் கடலைக் காணார் கனவரைத் திரிகூடத்தில்*
*அருளொரு வடிவாய்ப் பூமி அந்தர சுவர்க்கம் மூன்றும்*
*மருவுபே ரொளியாம் முக்கண் மாணிக்க மலையைக்*
*கண்டார்"*

(தலமகிமைச்சருக்கம் பாடல்-159)

என்ற திருக்குற்றாலத் தலபுராணச் செய்யுளால் அறியலாம். மேலும் அகத்தியன் பொதிய மலையில் இன்னும் தவ வாழ்வில் நிலைத்திருப்பது போன்ற செய்திகளும் கூறப்பட்டுள்ளன.

குற்றால தலத்திற்கு இருபத்தொரு திருப்பெயர்கள் உண்டு என்ற செய்தி திருக்குற்றாலத் தலபுராணத்தின் கண் சொல்லப்படுகின்றது. தல மகிமைச் சருக்கத்தில்

*"பிதுர்கண்டம் தீர்த்தபுரம் சிவத்துரோ கந்தீர்த்த பெருமை மூதூர்*
*மதுவுண்டான் உயிர்மீட்ட புரம் பவர்க்க மீட்டபுரம் வசந்தப் பேரூர்*
*முதுகங்கை வந்தபுரம் செண்பகா ரணியபுரம் முக்தி வேலி*
*நதிமுன்றில் மாநகரம் திருநகரம் நன்னகரம் ஞானப் பாக்கம்.*

(பாடல்-30)

*வேடன் வலம் செய்தபுரம் வேழம்பூ சித்தபுரம் வேதசக்தி*
*பீடபுரம் சிவமுகுந்த பிரமபுரம் முனிக்குருகும் பேரூர் தேவ*
*கூடபுரம் திரிகூட புரம் புடார்ச் சுனபுரம் பொற் குறும்பலா வி*
*சேடபுரம் என இருபத் தொரு நாமம் பெற்றபதி திருக்குற்றாலம்"*

(பாடல்-31)

என்ற பாடல்களில் இருபத்தொரு பெயர்களும் சொல்லப்படுகின்றன. அப்பெயர்கள் வந்ததற்கான காரணங்களைக் காணலாம்.

கவுற்சனன் என்னும் பிராமணன் தீமையின் வடிவாய்த்திரிந்தலைந்து இறந்து நரகத்தில் இடர்ப்பட்டான். அவனது மகன் சுகுற்சனன் தந்தையின் தீச்செயல்களை அறிந்து வருந்தி நாரத முனிவரின் நல்வழிப்படி வடவருவியில் மூழ்கி அதன் நற்பயனைத் தந்தைக்குத் தந்ததனால் தந்தையும், நரகத்தினின்றும் விடுபட்டான். திரிகூடநாதனை வணங்கி வழிபட்டுக் கற்பக நாட்டை அடைந்ததனால் பிதுர் கண்டந்தீர்த்தபுரம் எனப்பட்டது

கொடிய வறுமையில் உண்ண உணவும், உடுத்த உடையுமின்றி உழன்ற ஒருவன் ஒருநாள் குளிர் தாங்க முடியாமல் சிவன் கோவிலில் இறைவனின் பரிவட்டத்தைத் திருடிப் போர்த்தி சிவத்துரோகம் அடைந்தான். திரிகூட மலையில் உள்ள நதியில் மூழ்க அத்துரோகம் அவனை விட்டு நீங்கியது. ஆதலால் சிவத்துரோகம் தீர்த்த புரம் என்ற பெயர் வந்தது.

தருமசாமி என்னும் பிராமணன் தன் குல நெறிகட்கு மாறாக பரத்தையரிடம் சென்று அவள்தரும் இன்பத்தையும், மதுவையும் உண்டு மகிழ்ந்தான். இதனால் அவன் உடல் நலம் குன்றி வரும் நாளில் நாரத முனிவரின் அறிவுரைப்படி வடவருவியில் மூழ்கிக் குளித்துப் பாவம் போக்கி உயிர் மீண்டதால் 'மதுஉண்டான்உயிர்மீட்ட புரம்' என குற்றாலத்திற்குப் பெயர் வந்தது என்பர். கண்டக சேதனன் என்ற வணிகன் குற்றாலத்திற்கு வந்து தங்கி வணிகம் செய்யும் பொழுது அநியாயமான கொடிய விலைக்குப் பொருள்களை விற்று ஊர் திரும்பி பணங்காத்த பேய் போலிருந்து அறம் ஒன்றும் செய்யாது இறந்ததால் யமதூதர்கள் இவனை நரகத்தில் இட்டுத் துன்புறுத்த இயமதர்மராசன். இவன் சிலகாலம் குற்றாலத்தில் தங்கியதால் இவன் செய்த பாவமெல்லாம் புண்ணியம் ஆயிற்று என்று நினைத்து விடுவிக்க கண்டகசேதனன் நரகத்திலிருந்து கயிலாயம் சென்றமையால் பவர்க்க மீட்ட புரம் எனக்கூறப்பட்டது.

ஆத்திரேயன் என்பான் காமக்கடலில் மூழ்கியும், வஞ்சகம் செய்தும் பொய் பேசியும், கட்குடித்தும், கொலைகள் செய்தும், திருட்டுத் தொழிலில் ஈடுபட்டும், தீய குணங்களின் வடிவமாகவே மாறினான். உடல் தளர்ந்து குற்றாலத்திலுள்ள மந்த மாருதமாகிய தென்றற்காற்று அவன் மேல் வீச அவன் அறிவு தெளிந்து நற்குணமடைந்து நற்கதி பெற்றான். தென்றலாகிய வசந்தம் இந்த நற்பயனை அளித்ததால் இத்தலம் வசந்தப் பேரூர் என்றழைக்கப்படலாயிற்று.

கங்கை, குற்றாலத்திற்கு வந்து திரிகூடநாதனை வழிபட்டதால் முதுகங்கை வந்தபுரம் என்றும், திரிகூட மலையில் தேன் நிறைந்த செண்பக மலர்களின் வாசம் வானுலகில் வெடிக்கும் வண்ணம் செண்பகக்

காடுகள் நிறைநது இருப்பதால் செண்பகாரண்யபுரம் என்றும், குற்றாலத்திற்கு வந்து வணங்குவோர் பிறவிக்கடல் கடந்து அழியாத முக்தி இன்பத்தைப் பெறுதலால் "முக்தி வேலி" என்றும், திருக்கோயில் முன் நதி ஓடுவதால் நதி முன்றில் மாநகரம் என்றும், குற்றால இறைவன் தன்னை வணங்குவோர்க்குச் செல்வத்தை வழங்குவதால் இத்தலத்திற்கு திருநகரம் என்றும், நன்மையும் அழகும் நல்குவதால் நன்னகரம் என்றும், அறிவு மன்றமாகிய சித்திரமன்றம் இங்கிருப்பதால் "ஞானப்பாக்கம்" என்றும் வழங்கப்படலாயிற்று.

வலன் என்னும் வேடன் தான் வேட்டையாடிப் பெற்ற முயலினைத் திருடிச் சென்ற நரியை விரட்டிச் சென்றான். நரி சங்க வீதியை வலம் சுற்றி ஓட இவனும் விரட்டிச் சென்றான். இவ்வாறு நரியும் வேடனும் வலஞ்சுற்றியதால் வேடன் சிவகணத்துள் ஒருவனாயும் நரி கிங்கரனாயும் பதவிகள் பெற்றனர். அதனால் வேடன் வலஞ்செய்தபுரம் எனும் பெயர் வந்தது.

வறட்சியில் தத்தளித்த யானை ஒன்று செண்பகச்சோலைக்கு வந்து அங்குள்ள கனிகளை உண்டு வடவருவித் தண்ணீரையும் குடித்து மகிழ்ந்ததோடு தன் துதிக்கையினால் நீரையள்ளித் தன் உடலில் சொரிய அந்நீர் பெருக்கெடுத்துச் சோலையில் யானை உதிர்த்த தளிர், தழை, மலர், கனியெல்லாம் குறும்பலா ஈசர் பக்கம் சேர்ந்தது இவ்வாறு யானை, தன்செய்கையின் பலன் அறியாமல் வழிபட்டாலும் இறைவன் அதையும் ஏற்று, 'கெசகர்ணன்' எனும் பெயர் கொடுத்து கயிலாயத்தில் வாயிற்காவலனாக அமர்த்தினார். இதனால் இவ்வூர் 'வேழம் பூசித்தபுரம்' என்றாயிற்று.

பராசக்தி பீடம் இங்கிருப்பதால் வேதசக்தி பீடபுரம் என்றும், தமிழ் முனிவர் அகத்தியருக்காக திருமால் சிவனாக மாறிய தலம் ஆதலால் 'சிவமுகுந்த புரம்' என்றும், அகத்திய முனிவரின் வழிபாட்டிற்கு இறைவன் உருகி அருளியதால் முனிக்குருகும் பேரூர் என்றும், தேவர் உலகத்தவர் வழிபட்டு வணங்கும் தலமாதலால் தேவகூடபுரம் என்றும், குற்றால மலையின் உச்சியில் மூன்று சிகரங்கள் காணப்படுவதால் இம்மலைக்குத் திரிகூடமலை என்றாகிப் பின்னர் குற்றாலநகருக்குத் திரிகூடபுரம் என்றாயிற்று. அருச்சுனன் சம்புடங்கண்டு எடுத்த இடமாதலால் 'புடார்ச்சுனபுரம்' என்றும், வேதங்களே குறும்பலாவாக முளைத்திருந்து சிவபெருமானை வழிபாடு செய்யும் சிறப்புடைய தலம் ஆதலால் குறும்பலா விசேடபுரம் என்றும் இருபத்தியொரு பெயர்களால் இவ்வூர்ப் பெயர்கள் இலங்குகின்றன.* இத்தகு சிறப்புமிக்க குற்றால

* திருக்குற்றாலம் தலவரலாறு - ஏ சி சண்முக நயினார். பக். 38-42

நாட்டின் வளத்திற்குக் காரணமான மளளர்களின் சிறப்புக்களை வள்ளுவரைப் போலவே திரிகூடராசப்பரும் போற்றிப் புகழ்கின்றார்.

## நாட்டு வளமும் மள்ளர் மாண்பும்

ஒருநாடு நலமும் வளமும் பெற வேண்டுமெனில் அந்நாடு தள்ளா விளையுலும் தக்காரும் தாழ்விலாச் செல்வரும் சேர்ந்திருக்க வேண்டும் என்றார் வள்ளுவப்பெருந்தகையார். தள்ளா விளைச்சலை நல்கும் தகவுடையவர்கள் வேளாண்மைப் பயிர் வளர்க்கும் மள்ளர்களே ஆவர். தாம் செய்யும் உழவுத் தொழிலால் அவர்கள் உலகை உய்விக்கின்றனர். திருக்குற்றாலம் சார்ந்த தென்பாண்டி நாட்டின் சிறப்பினைத் தல புராணத்தின் தொடக்கத்திலேயே திருநாட்டுச் சருக்கம் என்ற பகுதியில் நாட்டின் நீர்வளத்தினையும் அவற்றைப் பயன்படுத்தி வேளாண்மை செய்யும் மள்ளர்களின் மேன்மையையும் திரிகூடராசப்பக் கவிராயர் விரிவாகவே பேசுகின்றார்.

## திருமாலை ஒத்த மள்ளர்

நீர்வளத்தைப் பாதுகாப்பது முதன்மையான செயல் என்பதை உணர்ந்த மள்ளர்கள் ஆற்றின் துறைகள் தோறும் வரிசையாக அணைகளை அமைக்கின்றனர். பெருமுழக்கம் செய்யும் கடலில் அணைகட்டிய திருமாலை மள்ளர் ஒப்பர் என்றும், மிகுந்த புனலால் தடாகம், குளம் முதலியவற்றையும் நிரப்பி நீர் வளத்தையும் அவர்கள் நிலைப்படுத்து கின்றனர் என்றும் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

## ஏர்க்களமும் போர்க்களமும்

ஆறு, குளம், போன்ற நீர் நிலைகளின் முன் பயிர்த் தொழில் செய்யும் உழவர்களாகிய மள்ளர்கள் ஊதுகுழல், மருதநிலப்பறை, சங்கு முதலிய இசைக் கருவிகளை முழக்கிக் கூடுகிறார்கள். அவர்கள் கலப்பை முதலியவற்றால் உழுதல் முதலிய வினைகளைச் செய்தல், போர்த் தொழிலைச் செய்வதைப் போல் உள்ளது. இவ்வாறு பசுமையான பயிரினைக் காக்கும் மள்ளர்கள் படைத் தலைவர்களைப் போல விளங்குகின்றனர் என்கிறார் ஆசிரியர்.

*"கொம்புக்கிணை கோடு குமுறக் குழுமி மள்ளர்*
*அம்புநதி வாவி தடமாரகழி யாகத்*
*தம் படைசெயுந் தொழில்கள் வென்றி நிலை சாரப்*
*பைம்பயி ரரண்புரி படைத் தலைவ ரொத்தார்"*

(திருநாட்டுச் சருக்கம் - பாடல்-2)

வெற்றியைத் தரும் சிவபிரான் திரிகூட மலையில் தெய்வப் பொது நெறிப் படி இந்திரனை முதற்கண் வழிபட்டு, மள்ளர்கள் தாம் பயின்ற உழவுத் தொழில்களைத் தொடங்கினர்.

*"சைவவிசை யம்புரி சயம்புதிரி கூடத்*
*தெய்வநெறி இந்திரன் முதற்பரவல் செய்து*
*கைவரு படைத் தொழிலுடன் களமர் சென்றார்."*

(பாடல்-3)

நறுமணங் கமழ்கின்ற மலர்கள் உள்ள கழனியில் தேன் மிக ஒழுக அதனைப் புறம் போக விடாமல் பெரிய மடை வழியாகச் சேர்த்துக் கொண்ட மள்ளர்கள் வடிகாலில் உள்ள மடைகளைத் திறந்து தாமே வரும் சங்குத் தொகுதிகளை அகற்றி, தாமரை குவளைகளின் இலையை, எருவாக மிதித்துக் கலப்பைகளை வரிசை பிரிப்பார்கள்.

*"தேமடை மலர்க்கழனி தேன் வடிய மள்ளர்*
*மாமடை செறித்த வயல் வாய்மடை திறந்து*
*தாமடை வளைக்குவை சரித்துமரை காவி*
*யாமடை மிதித்துழு படைக்கணி வகுப்பார்."*

(பாடல்-4)

மள்ளர் கூடுதலினால் எழும் ஓசையும் பெருகும் தண்ணீரின் ஓசையும் மருத நில இசைக் கருவியாகிய கிணையின் ஒலியும் முத்தமிழுக்கும் உரிய தமிழ் மக்களின் திருமண ஆரவார ஒலியும் மிகுதலால் பழமையான கடலின் ஒலியும் அஞ்சுகிறது.

கறுத்த நிறமுள்ள உழவர் கூட்டம் அழகிய கொழுப்படையை இணைத்து நல்ல வேளை பார்த்து வரிசைப்பட ஏர்களைச் செலுத்தி உழுகின்றனர். அவ்வாறு உழுது எரு இட்ட மள்ளர்கள் "எங்கும் செந்நெல் விளைக" என வாழ்த்தித் தண்ணிய முளைகளை விதைத்தனர்.

## வண்ணமிகு வேளாண்மை

இங்ஙனம் விதைத்தவை முத்துப் போல் முளைத்து, பொன்போல் அரும்பி, பவளம் போல் பயிர்கள் வளர்ந்து, பச்சைக் கற்களைப் போல் தோகை விரியச் செய்து, நீல நிறம் மிகுந்த சிறப்புடையவையாய்த் தோன்றின. நாற்றின் பக்குவம் கண்டு சேற்று மணம் எங்கும் கமழும் வயலிடங்களை உழுது பக்குவப்பட்ட சேறு ஆக்கி இந்திரனை வணங்கி உழவர்கள் செயல்களை மேற்கொள்கின்றனர்.

*"முத்தென முளைத்துப் பொன்னின் முகிழ்தம் விளைத்துக் கால்கள்*
*வித்துருமம் போனீட்டி மரகதம் விரித்து நீலம்*
*மொய்த்த சீர் நாறு நாறு முறைகண்டு சேறு நாறச்*
*செய்த்தலை யுழுது சீர்ப்பத் தெளி செய்து தெய்வம் போற்றி"*

(பாடல்-9)

## அமைச்சர்களை ஒத்த மள்ளர்கள்

நாற்றங்கால்களிலிருந்து நாற்றுக்களைப் பெயர்த்து அவற்றை வெவ்வேறு முடிக்கற்றைகளாகக் கட்டுதல் பின்னர் அவற்றை எடுத்துச் சென்று நட வேண்டிய வயல்களில் மீளவும் அவற்றை நடுதல் ஆகிய செயல்களை மள்ளர்களாகிய உழவர்கள் செய்கிறார்கள் மன்னர்களைப் பிரித்தலும் அங்ஙனம் பிரிக்கப் பெற்றவர்களைத் தம் வழியில் பேணிக் காத்தலும், காத்தாரை மறுபடியும் புது நட்புக் கொள்ளச் செய்தலும் ஆகியவற்றில் வல்ல அமைச்சர்களை மள்ளர்கள் ஒத்தனர். பண்ணைகள் மன்னர்களை ஒத்தன. செந்நெற் பயிர்கள் வளர்ந்து நிமிர்ந்து தழைத்துக் கருவுற்று நல்லோர் செய்த செயல் நற்பயன் தருதல் போலக் கதிர்களை ஈன்று முற்றி விளைந்தன.

*"அரித்தலும் பெயர்த்து வெவ்வேறமைத்தலு மமைத்த நாறு*
*பரித்தலுங் கழனி தோறும் பதித்தலும் புரியு மள்ளர்*
*பிரித்தலும் பிரித்தார் தம்மைப் பேணலும் பேணிப் பின்னர்ப்*
*பொருத்தலுஞ் செயும் அமைச்சர் போல்வர்மன் பொருவும் பண்ணை"*

(பாடல்-10)

அன்புள்ளம் கொண்ட உழவர்கள் நல்ல நாளில் கதிர் அறுவடை செய்து உற்றார் உறவினருடன் உண்டு மகிழ்ந்து விழாக் கொண்டாடினர். அது இந்திரன் மகள் முருகன் திருமணத்தின் போது இந்திரர் உலகத்துப்

பெண்கள் மண விருந்து உண்டு மகிழ்நதது போன்றிருந்தது என்பதை,

*"காதல்சேர் களமர் நன்னாட் கதிர்செய்து களித்துண் டாடல்*
*பூதர மெறிந்த செவ்வேள் புரந்தரன் மகளை வேட்கும்*
*மாதர்மாமணத்துத் தெயவ மகளிருண் டாட்டு மானும்"*
(திருநாட்டுச் சருக்கப்பாடல்-13)

என்ற பாடலால் அறியலாம்

## அகத்தியர் தென்னாடு வந்தது.

சிவபெருமான் உமாதேவியார் திருமணத்தைக் காண மூவுலகமும் இமயமலையிற் கூடியதால் வடக்குத் தாழ்ந்தது. தெற்கு உயர்ந்தது; தென்திசைக்கடல் நீர் வடதிசை சென்றது. (பாடல் -87)

அயன், மால் இருவரும் தேவர் புடை சூழ எழுந்து மூவுலகமும் பனிவரையில் வந்தமையின் விரைவாக வடக்குத் தாழ்ந்து தென்னாடு மேலுலகை நோக்கி உயர்ந்தது என இறைவனுக்கு உணர்த்தினர். (பாடல்-89)

சிவபெருமான் அருள கூர்ந்து அகத்தியரை நோக்க, அவர் இறைவனிடத்து வணங்கிச் செனறு வாய்பொத்திச் செவிதாழ்ந்து நின்று தமக்கு யாது பணி என வினவிய அகத்தியர் செவியில் அமுதம் வார்த்தது போல் இறைவன் பதினான்கு உலகமும் வந்து கூடியுள்ள திருமண அவையைக் காட்டி.

"நமது திருமணத்தின் பொருட்டுக் கூடியுள்ள பெருங்குழுவால் நிலம் எனும் மரக்கலம் தெற்கு பாகம் உயர வடபாகம் தாழ்ந்துள்ளதைக் காண்க இது கடலில் அமிழ்ந்து விடாது நிலை பெறுவதற்கு யாம் செல்லுதல் வேண்டும், அன்றி எம்மை இடைபறவின்றி உளத்தில் கொண்ட நீ உதவ வேண்டும்" என்றார்.

*"மன்றல் சேர்பெரு மங்கலக் குழுவினான் மகிதல மெனு நாவாய்*
*தென்றி சைப்புற முயர்ந்திட வடதிசை சென்று தாழ்ந் தது பாராய்*
*நின்று நீள்கட லமிழ்ந்திடா தினிநிலை நிறுத்துதற் கியாம் வேண்டும்*
*இன்றி யெம்மையே யிடைவிடா துளத்தினி லிருத்திய நீ வேண்டும்."*
(பாடல் - 93)

தேவேந்திரனுடைய உலகம் உட்பட அனைத்துலகின் நலனை உளங் கொண்டு இமவான் பெற்ற நமது அருள் வடிவாகிய உமாதேவியை

மந்திரங்களையுடைய ஆகமமுறைப்படி மணம் செய்ய எண்ணியுள்ள நம் பொருட்டு நமது திராவிட முனிவனே தென் திசைக்கு நீ மகிழ்ச்சியோடு செலலுதல் வேண்டும். நீ தென்றிசை சென்று வடதிசையின் கீழ்மையைநீக்கிப் பொதிய மலையிலே தங்கி வாழ்க! என்று இறைவன் அருள் புரிந்தார்.

*''இந்திராதியர் சுவர்க்கமு நிலைபெற விமயமீன் றருண்மாதை*
*மந்தி ராகமப் படிமணஞ் செய மனம் வைத்த நம் பொருட்டாக*
*நந்தி ராவிட முனிவ நீ தென்றிசை நயப்பொடுஞ் செலவேண்டும்.''*
(பாடல் - 94)

தனியாக அடியேனுடைய விண்ணப்பம் உள்ளது என முதல்வனை வணங்கி திருவருளால் இரண்டு வரங்களை விரும்பித் தெரிவிக்கின்றார் முனிவர்.

தாங்கள் இமயவரைச் செல்வியைத் திருமணஞ் செய்து கொள்ளும் காட்சியைக் காணவும், உங்களின் அற்புதத் திருக்கூத்தைக் காணவும், தாங்கள் அருள் புரிய வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தார். இறைவன், ''எமக்கும் இறைவிக்கும் இனிய தலமாகவும் மும்மூர்த்திகளும் எம்மை வந்து வழிபடும் தலமாகவும் உள்ளது குற்றாலம் ஆகும். இப்போது மாயோன் உருவில் காட்சி தரும் அவ்விடத்து நம்மைத் தொழுது சிவலிங்க வடிவாக்கி மகுடாகம முறைப்படி பூசை செய்து அதன் பயனாக நமது திருமணக் கோலத்தைக் கண்டு இன்புறுக. திரிகூட மலைச் சாரலில் ஐந்நூறு சிவ வேள்வியை முடித்து நான்மறைகள் ஏத்தும் சித்திர சபையில் நமது அற்புதக் கூத்தைக் காண்க'', என்று அகத்தியருக்கு அருளினார் சிவபெருமான்.

*''மாலாகி யிருக்குநமைப் பணிந்துசிவ வடிவாக்கி மகுட மென்னும்*
*நூலாதி யாகமத்தாற் பூசைசெய்து நுவலுமணக் கோலங் காண்டி*
*மேலான திரிகூடச் சாரலிடை யைஞ்நூறு வேள்வி செய்து*
*நாலான மறைபரவு நம்பெருஞ்சித் திரசபைக்கே நடனங் காண்டி''*
(பாடல் 110)

இறைவன் திருவருளால் இமயம் விடுத்துத் தென்னகத்துப் பொதியம் சேர்ந்த போது தேவலோகத்தவர் நிரம்பிய வடதிசையொடு ஒத்துத் தென் திசையும் உலகைச் சமன் செய்து நின்றது என்பதை.

*"கும்பமுனி தண்பொதியந் தென்பொதிய மாமலைமேற் குறுகுங் காலை.*
*உம்பர் வட திசைபோலத் தென்றிசையு மொத்தது*

(திருமணச்சருக்கம் - பாடல் - 113)

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

## திருமால் சிவபிரானானது

**வ**டதிசையையும், தென்திசையையும் சமன் செய்ய வந்த தமிழ் முனிவர் குற்றாலம் வந்து சேர்ந்தார். திரிகூட மலை வந்த பின் சங்க வீதியில் உள்ள கோயிலுக்குள் புக வடதிசைக் காவலர் திருமால் கோயிலில் சிவனடியார் செல்லலாகாது எனத் தடுத்தனர். உடனே தனக்குத் தமிழறிவு தந்த முருகக் கடவுள் இருக்குமிடம் சென்று முறையிட, வஞ்சக மறையோரை வஞ்சகத்தால் வெல்ல வேண்டும். ஆதலால் வைணவக் கோலத்தோடு கோயிலுட் சென்று மகுடாகம முறைப்படி வழிபாடு செய்து திருமாலை சிவலிங்கமாக்கி வழிபடுக'' என்று அருளிச் செய்து சிவ ஆகமங்களையும் உபதேசித்து அருளினார். அன்றிரவே மணலால் இரண்டு சிவலிங்கங்களை உருவாக்கி வழிபட்டு மறுநாள் வைணவக் கோலத்தோடு சிவனுக்கும், திருமாலுக்கும், பொதுவான பெயர்களைச் சொல்லி,

*முத்தனே முளரிக்கண்ணா மூலமென்றழைத்த வேழப்*
*பத்திமி னெல்லை காக்கும் பகவனே திகிரி யாளா*
*கத்தனே யருள்சூற் கொண்ட கந்தரக் கறுப்பினானே*
*நந்தணி செவிய கோல நாடுதற் கரியநம்பி''*

(பாடல்-138)

என்று பாடி சங்க வீதிகளில் பரவித் தொழுது செல்ல, வைணவர் தங்கள் குருவென்று வணங்கிக் கோயிலுள் அழைத்துச் சென்றனர்.

கோயிலுள் சென்றதும் வழிபாட்டுக்குரிய பொருட்களைக் கொண்டு வரக் கட்டளையிட, அவர்கள் திருமால் வழிபாட்டுக்குரிய பொருட்களைக் கொண்டு வந்தனர். அவர்களை வெளியே அனுப்பி விட்டு நெடிதுயர்ந்து நின்ற திருமாலின் சங்கமிருந்த கையில் மான் இருக்கவும், துளபமிருந்த தலையில் இளம் பிறையைச் சூடியும், பொட்டிருந்த நெற்றியில் கண்ணிருக்கவும், ரத்தினமிருந்த மார்பில் பாம்பிருக்கவும், நீண்ட திருமேனி 'குறுகுகுறுகு' என சிவனை நினைத்துத் தொழுது திருவடியின் கீழ் அணுகும் போது, நீதி நிலைக்க,பொருள் பெருக, அறம் வளர, சைவம்

ஓங்க திருமால திருமேனி குறுகி சிவலிங்க வடிவாயினர் என்பதை.

*"சித்தினாற் கரும்பொன் மேனி செம்பொனாம் படிபோற் கும்பன்*
*பத்தியா லுருகி மாலாம் படிவனே பரமனானான்"*

(பாடல்-144)

என்ற பாடலடிகளால் அறியலாம் பின்னர் அவருக்கு தமிழ் முனிவர் ஆகம முறைப்படி ஆடை அணிவித்துப் பூமாலை புனைந்து வழிபாடு இயற்றி திருக்கதவைத் திறந்து குற்றாலத்து இறைவனைப் போற்றி, போற்றி என்று ஏத்திப் புகழ்ந்து வணங்கினார்.

## சமய நல்லிணக்கம்

வைணவர்கள், அகத்தியர் இருக்க திருமாலைக் காணாமல் திகைத்து அவருக்குத் துன்பம் தர முனைந்த போது அவர்களை நோக்கி ஒரு தருப்பைப் புல்லை மந்திரித்து விட, அப்புல் வைணவர்களை மோத, அவர்கள் அஞ்சி நடுங்கி, முனிவரை வணங்கி தங்களைக் காத்திட வேண்டினார்கள். தமிழ் முனிவர் அவர்களுக்கு இரங்கி, அவர்களை நோக்கி.

*"நாதனார் சங்க வீதி நயந்துறை தென்மேல் பாலின்*
*மாதவன் தனைப்பூ சித்து வாழுமின் வாழுங் காலைச்*
*சீதரன் சமைய மென்றுஞ் சிவபிரான் சமைய மென்றும்*
*பேதம்நீர் புரிவீ ரல்லீர் பெருமறை வல்லீ ரென்றான்"*

(பாடல்-169)

என்ற பாடற் கருத்துப்படி திரிகூடநாதர் சங்க வீதியில் தென்மேற்குப் பகுதியில் திருமாலினை வைத்து வழிபாடு செய்யுங்கள். சீதரன் சமயமென்றும் சிவபிரான் சமயமென்றும் வேறுபாடு செய்யாதீர்கள் என்று கூறினார். வைணவர்களும் அகத்தியர் அறிவுரைப்படி நடப்போம் என்று உறுதியளித்துச் சென்றனர்.

அகத்தியர் பின்னர் சைவ மறையோர்களை அழைத்து அவர்கட்கு சைவ ஆகம விதிகளை ஓதி, சிவ வழிபாட்டு முறைகளை உணர்த்தி திருக்குற்றாலநாதரை மகுடாகம முறைப்படி வழிபாடு செய்க என்று அறிவுறுத்தினார் பொதிகை மலை நோக்கிச் செல்லும் முன் இறைவன் திருமணத்தையும், சித்திரமன்றில் இறைவன் திருக்கூத்தையும் கண்டு களித்தார். பின்னர் மன நிறைவோடு பொதிகை மலை நோக்கிச் சென்றார்

சிந்தையுற நினைத்தார்க்கும் அழியாத கதி கொடுக்குந் திருக்குற்றாலத்தின் தல புராணத்தைப் ''புகழ் பெற்று விளங்கும் புராணம்'' என்று பதிப்பாசிரியர் உ.வே.சாமிநாதர் பாராட்டுகின்றார்

## திருக்குற்றால யமக அந்தாதி

திருக்குற்றால யமக அந்தாதி கி பி 1939 ஆண்டு முதல் முறையாக கோயில் பதிப்பாக வெளிவந்தது. கி.பி 1954-ல் இரண்டாம் பதிப்பும் வெளியாயிற்று. கட்டளைக் கலித்துறைப் பாக்களால் அமைந்த இந்நூல் காப்புச் செய்யுள் நான்கும் யமக அந்தாதிப் பாடல்கள் நூறும் கொண்டதாகும். இந்நூல் முழுமைக்கும் திரிகூடராசப்பர் வழியில் வந்த பெரும்புலவர் மே.சொ. சுப்பிரமணியக் கவிராயர் அவர்கள் அரியதொரு பொழிப்புரையை வழங்கியுள்ளார்.

பத்துப்பாட்டில் ஒரு பாட்டாகிய குறிஞ்சிப்பாட்டு ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ் அறிவுறுத்தப் பாடப்பட்டது. என்ற குறிப்பு இருப்பது போல் இந்தக் குற்றால யமக அந்தாதியும் தமிழின் இலக்கண நெறியைக் காட்டுவதாக அமைந்துள்ளதை இதன் காப்புச் செய்யுளின் முதற் பாடலிலே ''தமிழ் இயல் காட்டும் பாடல் அந்தாதி'' என ஆசிரியர் பாடுவதால் அறியலாம்.

அந்தாதி என்பது முன் நின்ற செய்யுளின் இறுதிக்கண் நின்ற எழுத்தேனும், அசையேனும், சீரேனும், அடியேனும், அடுத்து வரும் செய்யுளின் முதலாக வருமாறும், நூலின் ஈற்றுச் செய்யுளின் இறுதியில் உள்ள எழுத்தேனும் அசையேனும் சீரேனும் அடியேனும் முதற் செய்யுளின் முதலாக மண்டலித்து வருமாறும் தொடுப்பது அந்தாதி யாகும். யமகமாவது பல அடிகளாயினும், ஓரடியில் பல இடங்களி லாயினும் வந்த எழுத்துத் தொடர்களே மீண்டும் வந்து பொருள் வேறுபடுவது ஆகும்.

அந்தாதி இலக்கணத்தாலும், யமக இலக்கணத்தாலும் யாக்கப் பெற்ற நூலாதலால் யமகவந்தாதி எனப்பட்டது. திருக்குற்றாலத்துறை இறைவனைப் பற்றியதாகலின் ''திருக்குற்றால யமக அந்தாதி'' எனப்பட்டது.

திருக்குற்றால யமக அந்தாதியின் இறுதிச் செய்யுளின் ஈற்றில் உள்ள, ''இலம்பக வாசவன் போல் வாழ்வ ராள்வ ரெழு புவியே'' என்ற வரியின் இறுதியிலுள்ள புவி என்ற சொல் நூலின் முதற் செய்யுளின் தொடக்கமாக ''புவி தந்த வாரணனாரண னானவன்'' எனத் தொடங்குகிற தன்மை யமக அந்தாதியின் இலக்கணத்தை முழுமையாகப் பின்பற்றியுள்ளமையைப் புலப்படுத்தும்.

மேலும் நூலின் முதற் பாடலின் இறுதி வரியில் உள்ள ''புவி தந்த வாரணம் போன் முத்தி வீடு புரக்க நெஞ்சே'' என்ற ஈற்றில் உள்ள'புரக்க நெஞ்சே' என்பது இரண்டாவது பாடலில் முதலாக, ''புரந்தரனாடுதனில் பிறவார்'' என்று தொடங்குவது அந்தாதி இலக்கண முறை கடைப் பிடிக்கப் பட்டிருப்பதைத் தெளிவுபடுத்தும். இதே போல் நூல் முழுமையும் முதற் பாடலின் இறுதி வரியின் இறுதிச் சொல் அடுத்த பாட லின் முதலாவதாக வருவதைக் காணலாம்.

குற்றால நாதரின் புகழ்பாடும் யமக அந்தாதிப் பாடல்களில் அமைந்துள்ள சொல் நயம், பொருள் நயம் ஆகிய சிறப்பினைச் சில பாடலகளால் அறியலாம்.

*''விப்பிர சங்கந் தமிழ் வாணர் சங்கம் விராவுறுகல்*
*விப்பிர சங்கம் பெறுமுணர் வீர்சங்க வீதியின்மே*
*விப்பிர சங்கமழ் கொன்றையந் தாமனை மெய்யனைச்சே*
*விப்பிர சங்கதப் பொய்யாம் பிறப்பை விடுவதற்கே''*

(பாடல் 10)

''நன்றாகச் சொல்லும் ஆற்றல் வாய்ந்த சங்கத் தமிழ்வாணர்கள் சங்கத்தைச் சார்ந்து கல்விச் சொற்பொழிவுகளை வீடுபேறு கருதிக் கேட்கும் அறிவுடையோர்களே! சங்க வீதியில் பொருநதி தேன் கமழ்கின்ற கொன்றை மாலையுடைய, பகையாகிய பொய்யாம் பிறப்பறுப்பதற்கு உண்மை வடிவுடைய குற்றால நாதனைத் தொழுவீர்களாக'' என்பது இப்பாடலின் திரண்ட கருத்து. இதில் ''விப்பிரசங்கம்'' என்னும் ஒரு சொல்லே நான்கு அடிகளினும் தொடர்ந்து வந்து பொருள் வேறுபடுகின்றது.

| அடி | சொல் | பொருள் |
|---|---|---|
| 1 விப்பிர, சங்கத் | 3, விப்பிர+சங்க | நன்றாகச் சொல்லும் ஆறறல் வாய்நத |
| 1,2 கல்விப் பிரசங்கம் | கல்வி+பிரசங்கம் | அறிவார்ந்த சொற்பொழிவு |
| 2,3 மேவிப் பிரசங் | மேவி+பிரசம் | பிரசம்=தேன்; குறிஞ்சிப் பாட்டில் இபபொருளிலேயே ஆளப் பட்டுள்ளது |
| 3,4 சேவிப்பிரசங்கதப் | சேவிப்பிர்+ அசங்கதம் | அவமதிப்பிற்குரிய |

இங்கே தரப்பெற்ற பட்டியல் விளக்கத்தால் 'யமக' முறையில் ஒரு சொல்லே அடுத்தடுத்து வந்து வெவ்வேறான பொருள் தந்து சிறப்பிப்பதைக் காணலாம்.

*''பரவை யகத்துக் கிடந்தானுந் தூதொரு பாவலற்காப்*
*பரவை யகத்து நடந்தானு மண்டபம் பலபடைத்தும்*
*பரவை யகத்து ளிருந்தானுந் தேரெனப் பாய்திரையம்*
*பரவை யகத்துழி நின்றானு நன்னகர்ப் பண்ணவனே''*

(பாடல்-45)

திருப்பாற் கடலில் பள்ளி கொண்ட திருமாலும், பாவலனாகிய சுந்தரர்க்காகத் திருவாரூரில் பரவை நாச்சியாரிடம் தூது நடந்தவனும், பல அண்டங்களைப் படைத்தும் தன்னை வழிபாடு செய்கின்றவர்களுடைய அழகிய மனத்திலே இருந்தவனும், தாவுகின்ற அலைகளையுடைய கடலாகிய ஆடை பொருந்திய பூமியிலே நின்றவனும், குற்றாலத்தில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனே யாவன் என்ற பொருள் தரும் பாடலில் 'பரவையகத்து' என்ற சொற்களே நான்கு வரிகளிலும் வந்து பொருள் வேறுபடும் நயம் காணத்தக்கதாகும்

| அடி | சொல் | பொருள் |
|---|---|---|
| 1. பரவை யகத்து *கிடநதான்* | பரவை+அகத்துக *கிடந்தான்* | திருப்பாற கடலில கிடநத *திருமால* |
| 1,2 பாவலற்காப் பரவை யகதது நடந்தான | பாவலர் காப்+பரவை +அகதது நடநதான் பரவை | பாவலர் சுந்தராககாக பரவை நாச்சியாரின வீட்டுககுத தூது சென்றவன |
| 3, பரவை யகதது ளிருநதான | பரவு+ஐ+அகத்துள இருந்தான | வழிபடுபவரின் அழகிய மனத்துள் இருந்தவன |
| 4. பாயதிரையம பரவை அகததுழி நினறான் | பாய்திரை+அம்பரவை +அகததுழி நின்றான | தாவும் அலைகளையுடைய கடலாகிய ஆடை பொருந்திய பூமியில் நினறவன |

அகத்திய முனிவன் மேகங்கள் சூழ்ந்த நறுமணங் கமழ்கின்ற செண்பகச் சோலையை அடைந்து உமாதேவிநாயகனுடைய குற்றாலத்தையும் பொன்னால் செய்யப்பட்ட கோயிலையும் வணங்கி வலம் வந்து கருணை வள்ளலாகிய சிவபிரானுடைய சித்திர சபையிலே நடனத்தைக் கண்டு பெரிய தவத்தினாலே எல்லாவற்றிற்கும் காரணமான திருமணக் கோலத்தைக் காணப் பெற்றான், என்ற செய்தியை

*"மன்றலங் காரணி செண்பகக் காமன்னி மாதுமையாள்*
*மன்றலங் காரகப் பொற்கோயில் சூழ்வந்து வள்ளற் பிரான்*
*மன்றலங் காரத் திருநடஞ் சேவித்து மாதவத்தால்*
*மன்றலங் காரணங் காணப்பெற் றான்கும்ப மாதவனே"*

(பாடல்-69)

என்ற பாடலால் அறியலாம். இப்பாடலில் மன்றலங்கார என்னும் சொற்களே நான்கடிகளிலும் தொடர்ந்து வந்து பொருள் வேறுபடுகின்றன.

| அடி | சொல் | பொருள் |
|---|---|---|
| 1 மன்றலங் காரணி | மன்றல்+அம்கார்+அணி | வாசனையும் அழகிய மேகமும் பொருந்திய |
| 1+2, உமையாள் மன்றலங் காரகப பொற்கோயில் | உமையாள்+மன்+தலம்+ காரகப் பொற் கோயில் | உமையொரு பாகன் தலமாகிய குற்றாலத்துத் பொற்கோயில் |
| 2,3 பிரான **மன்றலங்** காரத் திரு நடம் | பிரான்+மன்று+ அலங்காரம்+திரு நடம | சிவபிரானுடைய சித்திர சபையில் நடனம் கண்டு. |
| 4. மனறலரங் காரணம் | மன்றல்+அம்+காரணம் | எல்லாவற்றிற்கும் காரணமான திருமணக்கோலம் |

இவ்வாறு திருக்குற்றால யமக அந்தாதி தம் பெயருக்கேற்ப குற்றால நாதருடைய சிறப்புகளைச் சிற்றிலக்கிய முறையில் சிறப்பிக்கின்றன.

## திருக்குற்றால நாதர் உலா

'உலா' எனப்பெயரிய இவ்வகைச் சிற்றிலக்கியத்திற்கான குறிப்பினைத் தொல்காப்பியத்திலேயும் காணலாம்.

*"ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப*
*வழக்கொடு சிவணிய வகைமை யான"*

என்பது தொல்காப்பியம். பாட்டுடைத் தலைவன் வீதியில் வருங்காலை எழுவகைப் பருவ மகளிர் அத்தலைவனைக் கண்டு, அவன், தோற்றஅழகிலும், அவனது மற்ற சிறப்புகளிலும் ஈடுபட்டு அவன்பாற் காதல் கொண்ட நிலையில், புலவரால் கலிவெண்பாவால் புனைந்து பாடப்பெற்ற நூல் உலா ஆகும். இந்நூல் உலாப்புறம் எனவும்படும். "புறஉலா என்பதே இலக்கணப் போலியாக உலாப்புறம் என

மாறியதென்று'' சங்கரநமச்சிவாயர் குறிப்பிடுகிறார். சீவக சிந்தாமணி கம்ப ராமாயணம் ஆகிய காப்பியங்களில் காப்பியத் தலைவர்கள் உலாச் சென்றதாயமைந்த கருத்தை யொற்றியே பின்னால் வந்த புலவர்கள் தனிச் சிற்றிலக்கியங்களால் பாடினர். இறைவன், அரசர், சிற்றரசர், செல்வர், புலவர் ஆகியோரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு இவ்வுலாக்கள் படைக்கப்பெற்றன.

திருக்குற்றாலநாதருலா எனப் பெயரிய இந்நூலின் பாட்டுடைத் தலைவன் குற்றாலத்துறை இறைவன். இறைவனைத் தலைவனாகக் கொண்டு யாக்கப் பெற்ற இது போன்ற உலாக்களை ''கடவுண் மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கம்'' என்று புறப்பொருள் வெண்பாமாலை கூறுகிறது. இச்சிற்றிலக்கியம் தனித்தனி நிகழ்ச்சிகளின் தொகுப்பாக அமையாமல் தொடர்ந்த பொருளுடைய ஒரு நெடும் பாட்டாக இயங்குவதால் இதனைத் தொடர் நிலைச் செய்யுட்களில் ஒன்றெனக் குறிப்பர்.

தமிழ் இலக்கியத்தில் மகளிர்க்குரிய பருவங்களை, பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என ஏழு வகைகளாகப் பிரிப்பதுண்டு. எழுவகைப் பருவ மகளிரும் இறைவன் திருஉலாவைக் கண்டு மயங்கும் நிலையைச் சொல்லுவதற்கு முன்பே, திரிகூடராசப்பக் கவிராயர் குற்றாலநாதர் சிறப்பை விளக்குகின்றார். இறைவன் அகத்தியரைத் தென்னாட்டுக்கு அனுப்பிய செய்தியும், அகத்தியமுனிவர், தமிழகத்திலாற்றிய அருஞ்செயல்களும், திருமாலுருவைச் சிவனுருவாக மாற்றி வழிபட்ட மாண்பும், திருவிழாச் செய்திகளும், இன்னிசை முழக்குவதற்குரிய இசைக் கருவிகளைப் பற்றியும் உலாவிற்கு வந்த மகளிர் மாதொரு பாகனான சிவபெருமானைப் பாராட்டுதலும் ஆகிய இன்னோரென்ன செய்திகளையும் இருநூற்று நான்கு கண்ணிகளால் கூறிய பின்பே, திரிகூடராசப்பக்கவிராயர் பெண்களின் பருவ நிலையைப் பாடலுற்றார். கவிராயரின் கற்பனைத் திறனும், சொல்லப் புகுந்த கருத்தைக் கவினுறப் புனைந்துரைக்கும் ஆற்றலும் இப்பகுதிகளில் காணலாம். ஒவ்வொரு பருவத்துப் பெண்ணையும் அவர்களது பருவநிலைக்கேற்ற நீர்மைகளையும் திரிகூடராசப்பக் கவிராயர் அழகுற விளக்குகின்றார்.

## பேதை

காதல் உணர்வுகள் வரப்பெறாத பருவம் பேதைப் பருவம் என்பதைச் சொல்ல வந்த ஆசிரியர்,

*''பேதை சிறுபருவப் பெண்பிள்ளை பஞ்சரத்துப்*
*பாதையறியாப் பசுங்கிள்ளை''*

(பாடல் வரி 408-409)

என்றும், அவளது விழிகளின் தன்மையை

*''அம்புபோல் வாள்போல் அடையாளம் பெற்றதல்லால்*
*வெம்புபோர் செய்யா விழியினாள்''*

(பாடல் வரி 416-417)

என்றும் சுவைபட இலக்கிய நயத்துடன் கூறுகின்றார். சிறுபருவப் பெண்பிள்ளை ஆகிய பேதையின் பேதைமையை திரிகூடராசப்பக் கவிராயர்

*''தாம்பைப் பிடிக்கும் தரம்போல வூருகின்ற*
*பாம்பைப் பிடிக்கும் பிராயத்தாள்....''*

(பாடல் வரிகள் 428-429)

என்றும் சுவைபடக் கூறுகின்றார்.

## பெதும்பை

பெதும்பைப் பருவத்தின் சிறப்பை ''பேசும் உலாவிற்குப் பெதும்பை புலி'' என்ற சான்றோர் வாக்கால் உணரலாம். பெதும்மைப் பருவம் பேதைப் பருவத்தினின்றும் வளர்ச்சியுற்ற பருவம் என்பதை விளக்க வந்த ஆசிரியர்,

*''அன்ன நடையிலழகு நடை தித்திவிக்கும்*
*சின்ன நடையுடைய சித்திரப் பெண்''*

(பாடல் வரிகள் 512-513)

என்று அவளது நடையழகைக் காட்டுகின்றார்.

### மங்கை

மங்கைப் பருவத்தில் அவளது கண்களின் நிலையைக் காட்டிய ஆசிரியர் அவளது பருவத்துக்கேற்ற மாற்றத்தையும் விளக்குகின்றார். மங்கைப் பருவத்து மடமானின் கண்கள் காதுவரைசென்று வினையமுஞ் சூதும் களவும் கொண்டுள்ளன என்பதை.

*''....பைங்கா*
*தளவும் படை போய் வினைய முஞ் சூதும்*
*களவும் கொடுதிருப்புங் கண்ணாள்''*

(பாடல் வரிகள்-629-631)

என்று குறிக்கின்றார்.

மங்கைப் பருவத்தாளின் முன்னழகையுஞ் சோதி முகத்தழகையும் வியந்து கூறப் புகுந்த கவிராயர், அவளுடைய மார்பகங்கள் அவளுடைய இளைத்த இடைக்கு இடையூறாக இருப்பதோடன்றியும் சிறந்த தவத்தோர்க்கும் கூட இடையூறு செய்யுமாறு உள்ளது எனக் கூறியிருக்கின்றார்.

*"இளைத்த தவத்தோர்க்கு மிடைக்கு மிடையூறாய்*
*முளைத்த குரும்பை முலையாள் - கிளைத்த முலை*
*முன்னழகுஞ் சோதி முகத்தழகும் பூங்கோதை*
*பின்னழகும் வாய்ப்பான பெண்ணரசு"*

(வரிகள்-638-641)

## மடந்தை

மங்கைப் பருவத்தை அடுத்து வரும் மடந்தைப் பருவப் பெண்ணின் எழிலை எடுத்துரைத்த கவிராயர் பின்னர் அவளின் இசைமொழியை,

*"கண்ணார் மணியே கனியேயுன் வாய்மொழிக்கு*
*விண்ணார் அமுதம் விலையாமோ?"*

(வரிகள்-797-798)

என்று வியந்து போற்றி அவள் யாழ் மீட்டும் ஓவியத்தைத் தீட்டுகிறார். தமிழரின் கலைப் பெட்டகமாம் சிலம்பினைப் படைத்த நுண்கலைச் செல்வர் இளங்கோவடிகள் மாமலர் நெடுங்கண் மாதவியின் கலைத் திறனைக் காட்ட வந்த போது அவள் யாழ் மீட்டும் காட்சியை ஓவியமாகத் தீட்டுவார். மாதவி தன் மணிக்காந்தள் மெல்விரல்கள் பயிர்வண்டின் கிளை போலப் பன்னரம்பின் மிசை படர

*"வார்தல் வடித்தல் உந்தல் உறழ்தல்*
*சீருட னுருட்டல் தெருட்டல் அள்ளல்*
*ஏருடைப் பட்டடைஎன இசையோர் வகுத்த*
*எட்டு வகையின் இசைக் கரணத்துப்*
*பட்டவகை தன் செவியினோர்த்து"*

(கானல்வரி-12-16)

என மேம்பட்ட கலைத்திறனைக் காட்டுகிறார். அவ்வண்ணமே நம் கவிராயரின் மடந்தையும்,

*"...சகரமுதல்*
*ஏழும் பொருத்தி நரம் பேழுந் திருத்தியொலி*
*ஏழும் வருதயிசை யேழிலே - சூழுவித்து..."*

(வரிகள்-772-774)

யாழ் மீட்டுவதைக் காணலாம்

## அரிவை

மடந்தைக்கு அடுத்து அரிவைப் பருவத்து ஆரணங்கைக் காட்ட வரும் கவிராயர் அவளது தோற்றத்தை,

*"அரிவை யொருத்தி யரிவையர்க்குங் காதற்*
*பரிவை விளைக்கு மடப்பாவை"*

(வரிகள்-852-853)

என்றுரைத்து அவளது மெய்யழகை,

*"மின்னை உருப்பிடித்து மேகத்தை மேலேற்றிப்*
*பொன்னை மயக்க விட்ட பூம்பாவை"*

(வரிகள்-860-861)

என்று நம் கண்ணைப் பறிக்கும் கவினைப் போற்றிப் புகழ்வதைக் கண்டின்புறலாம்.

## தெரிவை

தெரிவைப் பருவத்துப் பெண்ணின் பெருமையைப் புலப்படுத்த வந்த திரிகூடராசப்பக்கவிராயர் சித்திரப் பூம்பாவை ஒத்த தெரிவை இவள், "அரிவையர்க்கெல்லாம் அரசு" என்று புகழ்கிறார். "மீனைப் படுக்கும் விழிவலையாள்" என்று அவள் கண்ணழகின் கவினையும் காட்டுகிறார்.

மெல்லிடையாளான தெரிவை இறைவனை அடைய வேட்கை மிகுந்து மேனியொரு வல்லியினுஞ் சால வருந்தினாள்.

*"....மேலான*
*நின்னிடத்தில் என்னை நிறுத்தியொரு மாத்திரைப்போ*
*தென்னிடத்தில் நீவந் திருப்பாயேல் - உன்னிடத்தில*
*குற்றந் தீர்ப்பேனென் குறையு முடிப்பேன்"*

(வரிகள்-1021-1024)

என்று தெரிவை முறையிடுவதைக் காணலாம்.

## பேரிளம் பெண்

பேரிளம் பெண்ணின் பெருமை பேச வந்த கவிராயர் இறைவனை நோக்கி இறைஞ்சும் பெண்மையைக் காட்டுகின்றார்.

*"....உத்தமரே நீரென்னைக் கொண்டாலே தீரும் குறையென்றாள்"*

என்று காட்டுவதன் வழி இறுதியில் எல்லாரும் இறைவனை நோக்கியே முறையிட வேண்டும் என்ற தம் உட்கிடக்கையைக் கவிராயர் வெளிப்படுத்தக் காண்கிறோம்.

ஏழுவகைப் பருவப் பெண்களைக் காட்டிய கவிராயர், அவரவர் தம் பருவத்திற்கேற்பச் செயல்படும் செயல்பாட்டையும் விளக்குகிறார். பேதைப்பெண் பாவைகளை வைத்து விளையாடுகிறாள்; பெதும்பை கழங்காடுகின்றாள்; மங்கை பந்து விளையாட, மடந்தை யாழ் மீட்டுகிறாள், அரிவை ஓவியந்தீட்டிக் காட்டுகிறாள், தெரிவை விறலியிடம் இறைவனை அடைய முடியாமைக்கு வருந்துகிறாள்; பேரிளம் பெண்ணோ இறைவனை நோக்கி "உத்தமரே நீரென்னைக் கொண்டாலே குறை தீரும்" என இறைஞ்சுகிறாள்.

இறைவன் பாற் கொண்ட கழிபெருங்காதலால், உலாவின் போது, எழுவகைப் பருவத்தினர் நிலையைச் சுவைபடக் காட்டும் ஆசிரியர், உலா அருளிப் போந்த காரணம் 'தெய்வச் செந்நெறி வளரவும், முத்திப்பயிர் முளைத்தேறவுமே' என்பதை உய்த்துணரலாம்.

## திருக்குற்றாலச் சிலேடை வெண்பா

**தி**ருக்குற்றால மலையில் வாழ்கின்ற இறைவனைப் பற்றி இரட்டுறமொழித லென்னும் அமைதியானும் வெண்பா யாப்பானும் பாடப் பெற்றுள்ளது இந்நூல். தொண்ணூற்றாறுவகைச் சிற்றியலக்கியங்களில் இதுவும் ஒன்று. இவ்வாறு ஊரின் பெயரால் அங்குள்ள இறைவனைப்பற்றி எழுதப்பெற்ற சிலேடை வெண்பாக்கள் பல. அவற்றுள் குறிக்கத்தக்கன, திருநீர்மலைச்சிலேடை வெண்பா, திருக்கழுங்குன்றச் சிலேடை வெண்பா, திருமழிசைச் சிலேடை வெண்பா, புலியூர்ச் சிலேடை வெண்பா எனப் பலவாகும்.

சிலேடை வெண்பாக்களின் அமைப்பு எத்தன்மைத்து? நோக்குவோம். "சிலேடை வெண்பாக்களில் ஊரின் பெயரை இரண்டாமடி மூன்றாம் சீரில் வைத்து முன் இரண்டடிகளிற்சிலேடையையும், பின்

இரண்டடிகளில் திரிபையேனும், மடக்கையேனும் அமைத்துப் பாடுவது புலவர் மரபு'' என்று எல்லாச் சிலேடை வெண்பாவிற்குமுள்ள பொதுவிலக்கணத்தை டாக்டர். உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் குறிப்பிடுகின்றார். இம்மரபினைப் போற்றியே நம் திரிகூடராசப்பக் கவிராயரவர்களும்,

*''பூவைமார் பொன்முலைக்கும் பொன்முலைசே ராடவர்க்கும்*
*கோவைவாய் முத்தமிடும் குற்றாலம் - தேய்வுமதி*
*சூரியநாட் டத்தன் சுவர்க்கநா டும்பணிதென்*
*னாரியநாட் டத்த னகம்''*

(பாடல்-7)

என்ற பாடலில் இரண்டாமடி மூன்றாஞ்சீரில் ''குற்றாலம்'' என்ற ஊரின் பெயரை வைத்துப் பாடியிருக்கின்றார்கள். முதல் இரண்டடிகளில் ''பூவைமார் பொன் முலைக்கும் கோவை வாய் முத்தமிடும் குற்றாலம்'' என்றும் ''பொன்முலை சேராடவர்க்கும் கோவை வாய் முத்தமிடும் குற்றாலம்'' என்றும் சிலேடைப் பொருள் தருதலைக் காணலாம்

''பெண்டிரின் சுணங்குகளையுடைய நகில்களுக்குக் கோத்தல் வாய்ந்த முத்துமாலையை இடுகின்ற குற்றாலமென்றும்'' பெண்கள் சுணங்கினையுடைய முலையைச் சேர்கின்ற கணவர்களுக்குக் கோவை பழத்தைப் போன்ற வாய்முத்தம் கொடுக்கும் குற்றாலம் என்றும் சிலேடைப் பொருள் வந்திருப்பது நினைந்து இன்புறத்தக்கதாகும். திரிபு, மடக்கு ஆகிய முறைகளில் திரிபே இச்சிலேடை வெண்பாக்களில் பயின்று வந்துள்ளதைக் காணலாம். மேற்குறித்த வெண்பாவின் 'சூரிய நாட்டத்தன்' 'ஆரிய நாட்டத்தன்' என்பனவற்றுள், ஓரெழுத்தே வேறுபட்டிருத்தல் வெளிப்படை. 'சூரிய நாட்டத்தன்' என்பது சூரியனைக் கண்களாக உடையவன் என்றும், ஆரிய நாட்டத்தன் என்பது தென்னாரிய நாட்டைச் சேர்ந்தவன்' என்றும் பொருள் வேறுபடவந்து சிலேடை வெண்பா இலக்கணத்தோடு பொருந்தி வரக் காணலாம்.

திரிகூடராசப்பரின் மற்ற படைப்புகளில் விரிவாகச் சொல்லப்பட்ட செய்திகள் இச்சிலேடை வெண்பாக்களில் சுருக்கமாக இடம் பெற்றுள்ளன.

குற்றாலத்திலுள்ள மலை மூன்று சிகரங்களை உடையதென்றும், அதனால் திரிகூடாச்சலம் என்னும் திருப்பெயரையும் பெற்றது என்றும் இத்தலத்தைச் சார்ந்த பூஞ்சோலைக்கு சண்பகாரண்யம் என்று பெயராகும் என்றும், இங்குள்ள வடவருவியும் தேனருவியும் சிவமதுகங்கையும் சிறப்புடையவை என்றும் செய்திகள் சொல்லப்படுகின்றன.

வடவருவி தீர்த்தம் ஆடுவோருடைய பாவத்தைக் கழுநீராகப் பிரிந்து ஓடச் செய்யும் என்ற செய்தி.

*''சீதச் சிலம்பருவித் தீர்த்தமுநல் லார் குழலும்*
*கோதைக் கழுநீர்பெய் குற்றாலம் - வேதத்துத்*
*தெளிியரங் கத்தினார் செம்பரங்கம் பொன்னரங்கம்*
*வெள்ளியரங் கத்தினார் வீடு''*

(பாடல் 47)

என்ற பாடலில் சொல்லப்படுகின்றது.

''ஐவகை மன்றுதோறாடிய வள்ளல்'' என்ற போற்றப்பட்ட சிவபெருமான் சித்திரமன்றில் ஆடுகின்ற சோதியாக உள்ளார் என்ற செய்தி ஒரு பாடலிலும், சித்திரமன்றில் ஆடும்பொழுது அம்பிகை குழல்வாய்மொழி அம்மை தாளம் பிடித்தார் என்ற செய்தி பிறிதொரு பாடலிலும் சொல்லப்படுகின்றன. ஐந்து மன்றங்கள்பற்றி இன்னொரு பாடலிலும் கூறப்பட்டுள்ளது

*''மாதங்க மன்றுரித்தார் மாணிக்கம் வெள்ளிசெம்பொன்*
*மாதங்க மன்றுரித்தார் வாழ்வு''*

(பாடல்-25)

என்ற பாடலில் திருவாலங்காட்டிலுள்ள மாணிக்கமன்றும், மதுரையிலுள்ள வெள்ளி மன்றும் திருநெல்வேலியிலுள்ள செம்பு மன்றும் சிதம்பரத்திலுள்ள தங்கமன்றும் சொல்லப்படுகின்றன சிவபெருமான் குற்றாலத்தில் பிரமதேவனாகவும் திருமாலாகவும் இருந்து விளங்கிய செய்தியும் தமிழ்க்குறுமுனி அகத்தியர் வழிபட்டுப் பேறு பெற்ற செய்தியும் இதில் சொல்லப்படுகின்றன

## ஐம்பொருட் சிலேடை

சிலேடை பாடுவதிலும், ஐம்பொருட் சிலேடை அமையும் படி பாடுவது அரிதின் அரிதாம். திரிகூடராசப்பக் கவிராயர் தம் சிலேடை வெண்பாவில் ஐம்பொருட் சிலேடை அமையப் படைத்துள்ள திறத்தை டாக்டர் உ.வே.சா அவர்கள் சிறப்பாகக் குறிப்பிடுவர்.

*''ஒட்டினருங் கூத்தினரு மோடையும்வா ளுந்துகிலும்*
*கொட்டினெய்த வைக்காட்டுங் குற்றாலம் - கட்டிய பூண்*
*அக்குமணிக் கோவையா ரம்பரவை நாவலன்சொல்*
*வைக்குமணிக் கோவையார் வாழ்வு''*

(பாடல்-39)

என்ற பாடலில் வரும் முதல் ஏழு சீர்களுக்குள் ஐந்து சிலேடைகள் அமையப் பாடியுள்ளார்.

சபதம் செய்த போர் வீரர், இசைக்கருவிகளை இசைக்கும் கூத்தினர், நீர் நிறைந்த ஓடை, வெற்றியைத் தரும் வாள், அழகிய துகிலாகிய ஆடை என்ற ஐந்துக்கும் இசைய இரண்டாம் வரியில் சிலேடை அமைத்துப் பாடிய திறம் போற்றத்தக்கதாகும். அச்சிலேடையின் சிறப்பு வருமாறு

1. ஒட்டினர் கொட்டிய நெய்தலைக் காட்டும் குற்றாலம் - சபதம் செய்த போர் வீரர் தோளைக் கொட்டுதலோடு வருதலைக் காட்டும் குற்றாலம்

2. கூத்தினர் கொட்டி நெய்தலைக் காட்டும் குற்றாலம்-இசைக் கருவிகளைக் கொட்டி முழக்குவதோடு வரும் கூத்தினரை உடைய குற்றாலம்.

3. ஓடை கொட்டி நெய்தலைக் காட்டும் குற்றாலம்-நீர் நிரம்பிய ஓடையில் கொட்டிப் பூவும் நெய்தற் பூவும் மிதந்து வருதலையுடைய குற்றாலம்.

4. வாள் கொட்டி நெய் தலைக்கு ஆட்டும் குற்றாலம் - வெற்றியைத் தரும் வாள் சம்மட்டியால் அடிக்கப்பட்டு செம்மைப் படுத்தப்பட்டு வாளின் மீது நெய் பூசப்படும் வழக்கமுடைய குற்றாலம்.

5. துகில் கொட்டி நெய்தலைக் காட்டும் குற்றாலம்-நூலைத் தட்டி நெய்தல் தொழிலைச் செய்து துகிலின் பெருமையைக் காட்டும் குற்றாலம் என்று ஐந்து வகைச் சிலேடை அமையப் பாடப்பெற்ற பாடலைக் காணலாம்.

> *''ஒட்டினருங் கூத்தினரு மோடையும் வா ளுந்துகிலும்*
> *கொட்டினெய்த லைக்காட்டுங் குற்றாலம்.''*

என்று முதல் இருவரிகளில் வரும் ஏழு சீர்களுக்குள் ஐந்து சிலேடைகள் அமைத்துப் பாடும் திறம் நம்மை வியப்படைய வைக்கின்றது.

## திருக்குற்றால மாலை

திரிகூடராசப்பக்கவிராயரின் திருக்குற்றால மாலை யெனப் பெயரிய இந்நூல், ஆசிரியரின் பக்திச் சிறப்பைக் காட்டுவதாகும். கல்லைப் பிசைந்து கனியாக்க வல்லதான தேன்பிலிற்றுந் திருவாசகத் திருமுறையை நினைவூட்டுவதாக இந்நூல் அமைந்திருக்கின்றது. திருக்குற்றால மாலையில் குற்றால நாதனை அடைதற் பொருட்டுக் கவிராயரின் 'ஆன்மா' அழுது முறையிடும் பாங்கினைக் காண்கிறோம்.

''நெக்குநெக்கேங்கி அழுதால் அவனைப்பெறலாமே'' என்று அரற்றி அடியடைந்த சமயகுரவர் தம் வழிவந்த பெருமையை இந்நூலில் நிறுவியிருக்கிறார் திரிகூடராசப்பக் கவிராயர். நூறு பாடல்களைக் கொண்ட இந்நூலின்கண் கவிராயரின் கவிதைச் சிறப்புகளில் சிலவற்றைக் காணலாம்.

*''காலன் வரு முன்னே கண்பஞ் சடை முன்னே*
*பாலுண் கடைவாய் படுமுன்னே- மேல் விழுந்தே*
*உற்றார் அழுமுன்னே ஊரார் சுடுமுன்னே*
*குற்றாலத் தானையே கூறு''*

என வரும் பட்டினத்தார் கருத்தின் படியே, கவிராயரவர்களும்,

*''பழுக்கு முன்னேயுடல் நொய்க்கு முன்னே பதைத்தாவி யெல்லா*
*நழுக்கு முன்னேயுட்கி நாறுமுன்னே நமன் பாசத்தினால்*
*இழுக்கு முன்னே கண்மூடு முன்னே யிரதங்கடைவாய்*
*ஒழுக்கு முன்னே வந்து தோன்றாய் குற்றாலத்துறைபவனே''*

(பாடல்-89)

என்று பாடித் தன் மெய்யுணர்வின் திறத்தைக் காட்டுகின்றார். மணிவாசகப் பெருந்தகையின் ஆன்மப் போராட்டம் போலவே திரிகூடராசப்பரின் ஆன்மப் போராட்டத்தைத் திருக்குற்றால மாலையில் பார்க்க முடிகின்றது. பிறவிப் பெருங்கடலைக் கடக்கத் தவிக்கும் வாதவூரடிகள் இறைவனிடம் முறையிடுவதைப் போலவே,

*''தொண்டென்றுனக்குப் புரியேன் மகளிர் சுரி குழற்கே*
*வண்டென்று மாலையென்றுஞ் சுழல்வேனெனை வாழ்விப்பையோ''*

(பாடல்-83)

என்று நெஞ்சுருக இறைஞ்சுகிறார் திரிகூடராசப்பரும்.

இறைவனடி சேர்ந்தார் பிறவிக் பெருங்கடல் நீந்துவர். பிறவி பெற்று உலகியற் கட்டுக்களான் துன்புறும் உயிர் விடுதலை நோக்கியே வினையாற்றுகின்றது. திரிகூடராசப்பரும் இப்பிறவியின் சொல்லொணாத் தொல்லை மீக்கூர இறைவனை உள் ஒளி பெருகப் பாடிப் பரவுகின்றார்'' ''அழுக்கு வாழ்வில் வழுக்கலோ அதிகம்; குறை பல உடையேன், முறையிடுகின்றேன்; வேறென் செய்வேன், வேறெவர்க் குரைப்பேன்''? என்று தமிழ் முனிவர் திரு.வி.க, வின் முறையீட்டுக்குக் வழிகாட்டியாகவும்.

*"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்*
*பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்*
*கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்*
*வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்*
*செல்லா அ நின்றவித் தாவர சங்கமத்துள்*
*எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்..."*

என்று வரும் திருவாசகப் பகுதிக்குப் பொருளார்ந்த விளக்கம் போலவும் திரிகூடராசப்பக் கவிராயர் திருக்குற்றாலமாலையில்

*"செகந்தோறுஞ் சென்று செனித்தலுத்தேன் சென்மந்தோறும்*
*புல்வர்*
*முகந்தோறும் சென்றலுத்தேன்...."*

(பாடல்-85)

என்று பாடுகின்றார்.

எந்த நற்குணமும் இல்லாத என்னை எப்படி ஏற்றுக் கொண்டிருந்தீர் இறைவனே என இறைஞ்சும் கருத்து வெளிப்படும்

*"பக்தியுமில்லை வயிராக்கிய மில்லை பாரிலுண்மைச்*
*சத்தியமில்லைதவமாகிலுமில்லை சார்ந்த குணப்*
*புத்தியுமில்லை கொடியேனிருந்ததுர்ப்புத்திக்கு நீ*
*யொத்திருந்தெப்படியாள்வாய் குற்றாலத்துறை பவனே"*

(பாடல்-88)

என்ற பாடல் குறிப்பிடத்தக்கது.

மாணிக்கவாசகப் பெருமான் இறைவனை நோக்கி அழுதகைப் போன்று இப்பாடலும் அமைந்து இறைவனின் அருளினை வியந்து போற்றுகின்றது.

## திருக்குற்றாலப் பரம்பொருள் மாலை

**மா**லை என்பது கட்டளைக் கலித்துறைச் செய்யுள் அல்லது வெண்பாவினால் பாடப்படும் ஒரு சிற்றிலக்கிய வகையாகும். திருக்குற்றாலப் பரம்பொருள் மாலை கட்டளைக் கலித்துறை யாப்பில் அமைந்த முப்பத்தொரு பாடல்களும் காப்புச் செய்யுள் ஒன்றும் ஆக முப்பத்திரண்டு பாடல்களைக் கொண்டு விளங்குகிறது. குற்றாலப்பரம் பொருள் மாலை எனும் இந்நூல் 1954 ஆம் ஆண்டு திருக்குற்றாலக் கோயில் சார்பில் வெளியிடப் பெற்றுள்ளது.

நூல் தொடங்குவதற்கு முன் வழக்கம் போல விநாயகரிடமும் கலைவாணியிடமும், ''திருக் குற்றாலப் பரம்பொருள் மாலை'' என்னும் இந்நூலைச் செப்புவதற்கு அருள் புரிய வேண்டும் என்று ஆசிரியர் திரிகூடராசப்பக் கவிராயர் வணங்கி வழிபடுகிறார்

திரிகூடராசப்பக் கவிராயரின் மற்றொரு வழிபாட்டுப் பாடலாகிய திருக்குற்றால மாலையில் ஒவ்வொரு பாடலின் இறுதி வரியிலும் 'குற்றாலத் துறைபவனே' என்று முடிவதைப் போலவே இந்நூலிலும் 'திருக்குற்றாலப் பரம்பொருளே' என்றே முடிகிறது. மற்றவர் தம் குறைகளைத் தம்மீது ஏற்றிக்கொண்டு இறைவனிடம் முறையிடும் மணிவாசகப் பெருந்தகை போலவே திரிகூடராசப்பரும் இறைவனிடம் முறையிடுவதை நூல் முழுவதும் காணலாம்.

'திருவளர் சன்னதி' என்று தொடங்கும் முதற் பாடலிலேயே தான் குற்றாலப் பரம்பொருளின் அருளைப் பெற்றவன் என்பதைத் தெளிவுபடுத்துகின்றார் கவிராயர்

*''திருவளர் சன்னதி யுந்திரி கூடச் சிகரமுந்தண்*
*அருவியுஞ் சண்பகக் கோதை தன்பாகத் தருளும்பெற்றேன்*
*கருவளர் தாயர் பெறாவகை நீயென்னைக் காத்தருள்வாய்*
*பருவளை வீதி யுடையாய்குற் றாலப் பரம்பொருளே''*

என்று பாடுகின்றார்.

இறைவனின் அருளைப் பெற்ற தன்னுடைய பிறவிப் பிணியை அறுத்துக் 'கருவளர் தாயர் பெறா வகை'யில் தன்னைக் காத்திட வேண்டும் என்று முறையிடுகிறார் அடுத்த பாடலிலேயே தன்னைத் தாழ்த்தி நற்குணம் ஏதும் இல்லாதவன் என்று சொல்கின்றார்.

*''நற்குண மேது மறியே னறிந்துநயந் துவப்பாற்*
*கற்குந் தொழிலெனக் கேதேனு மில்லை கசிந்துனது*
*சொற்பெரும் பாடலகத் தென்றோ பிறவித்துயர் தவிர்ப்பேன்*
*பற்குணன் சம்புட மீந்தாய்குற் றாலப் பரம்பொருளே''*

(பாடல்-2 )

என்ற பாடலின் இறுதி வரியில் சிவபெருமானை வழிபட்டு அருச்சுனன் சம்புடம் பெற்றதையும குறிப்பிடுகின்றார். அடுத்த பாடலில் சுந்தரமூர்த்தி நாயனாரின் இரண்டாவது மனைவியாகிய துடியிடைச் சங்கிலி நாச்சி யாருக்குக் கொடுத்த வாக்குறுதி மீறலினால் இழந்த கண்களை சுந்தர மூர்த்தி நாயனார்க்கு சிவபெருமான் மீட்டுக் கொடுத்த பெரியபுராணச் செய்தியைக் குறிப்பிடுகின்றார். நாள் தோறும் அதிகாலையிலும் அந்தி

மயங்கும் மாலையிலும் மனம் மொழி மெய்களால் இறைவனின் திருவடியை வழிபாடு செய்யாத தன்னை ஆதரித்து அறிவு தந்து வந்து என்னை ஆண்டு கொண்டு நின் அடியார் திருக் கூட்டத்தில் சேர அருள் செய்து மணிவாசகருக்கு அமைந்ததைப் போன்று தனக்கும் குருவாய் அமைய வேண்டும் குற்றாலப் பரம் பொருளே' என்று முறையிடுவதைக் காணலாம்.

*''சிந்தனை வாக்குடம் பாலேது முன்றன் திருவடியை*
*அந்தியிற் காலையி லாதரி யேனுக் கறிவு தந்து*
*வந்தெனை யாண்டுன் னடியாரைச் சேர வரமருள்வாய்*
*பந்த மறுக்குங் குருவேகுற் றாலப் பரம் பொருளே''*

(பாடல்-9)

மூன்று சிகரங்களையுடைய திரிகூடத்தையும், தேன் மணங்கமழ்கின்ற சண்பகமா நதியையும் அலையெழும்பும் பொங்குமாங் கடலும் திரிவேணியும் சிறப்பு மிகு சித்திர மன்றமும் பீடக் கோயிலும் கொண்டவன் மாதொரு பாகனான சிவபெருமான் என்று குறிப்பிடும் பாடலைக் காணலாம்.

*''வரையார்முக் கூடமுந் தேனாறுஞ் சண்பக மாநதியுந்*
*திரையாரு பொங்கு கடற்றிரு வேணியுஞ் சிற்பொதுவும்*
*விரையார் குழல்மொழி பாகமும் வெள்வளை வீதியுடன்*
*பரைபீடக் கோயிலுங் கொண்டாய் குற்றாலப் பரம்பொருளே''*

(பாடல்-15)

## திருக்குற்றால ஊடல்

குற்றாலக் கூத்தனாரும். கயல்விழிப் பெண் குழல்வாய்மொழியும் ஊடல் கொண்டு, ஏசிப் பேசும் பகுதியாக, இருபது பாடல்களால் ஆன திருக்குற்றால ஊடல் இலக்கியச் சுவையும், நகைச் சுவையும் கலந்து காணப்படும் நூலாகும். இந்நூல் 'பள்ளு' வகையை நினைவு படுத்துவதாக அமைந்துள்ளது. ''இலக்கியம் காலத்தின் கண்ணாடி'' என்ற மெய்ம்மொழிக்கேற்ப இவ்வூடல் கவிராயர் வாழ்ந்த காலத்தைத் தெளிவாகக் காட்டும் கண்ணாடி ஆகும். அக்காலம் சைவ- வைணவப் பூசலும் கருத்து மாறுபாடும் எங்கும் நிறைந்திருந்த காலம். 'பள்ளு' நூல்களே அதற்குப் போதிய இலக்கியச் சான்றுகளாகும். அக்காலத்து நிலையை விளக்க முனைந்த கவிராயர் தான், 'பள்ளு இலக்கியம்' பாடாத

காரணத்தால் அக்காலத்துக் கருத்தை 'ஊடல்' எனப் பெயரிய இச்சிறு நூலின் கண் பெய்து பாடினார் எனலாம்

இந்நூலின் கண் சிவபெருமான் உமையம்மையிடம், திருமாலைப் பழித்துக் கூறுவதாகவும், உமையம்மையோ சிவபெருமானையும் பல்வேறு ஏதுக்கள் காட்டிக் கேலி பேசுவதாகவும் விளக்கப் பட்டிருத்தலையும் காணலாம்.

பழங்காலத்தில் சிவபெருமான் கோவணத்தோடு புலித்தோல் அணிந்திருந்ததைச் சொல்லி குழல்வாய்மொழி கேலி பேசும் காட்சியை திரிகூடராசப்பக் கவிராயர் ஓவியமாய் தீட்டிக் காட்டுகின்றார். .

*''அன்னாளிற் கோவணமும் புலித்தோலும்*
*வேடமுமா யாலின் கீழே*
*பன்னாளும் தூங்கின நீ ரென்னாவே*
*மணக் கோலப் பதம்பெற்றீரே*
*இன்னாளிற் சவவை கட்டிப் பூமுடித்துத்*
*தினஞ்சுகித்தா விதுவோ செய்வீர்''*

(பாடல்-7)

''குழல்வாய்மொழியின் அண்ணனாகிய இராமன் கைகேயி செய்த சூழ்ச்சியால் நாடு துறந்து மரவுரியுடுத்தி மான்தோல் அணிந்து தவக்கோலம் பூண்டு காடுதோறும் திரிந்தலைந்த செய்தியை மறந்து விட்டா என்னை இப்படிக் கேலி பேசுகிறாய்'' என்று சிவன் கேட்கும் கேள்வி நகைச்சுவை நல்க வல்லது ஆகும்.

*''வீதியாய் மரவுரிகிட் டினாசனம் பூண்டு*
*அரியதவ வேடந் தாங்கி*
*ஆதிநாட் கான்றோரு மலைந்து திரிந்*
*தானதுபோ யயோத்தி மேவி*
*மாது சீதையைப் புணர்ந்து பாராண்ட*
*உங்களண்ணன் மார்க்கமெல்லாங்*
*காது கேட்டிருந்து மிது சொன்னதென்ன*
*குழல்மொழிப்பூங் கயற்கண் மாதே''*

(பாடல் 8)

தன் அண்ணனைக் குறைசொன்னால் எந்தப் பெண் தான் ஏற்றுக் கொள்வாள்?

சிவன் கழுத்தில் நஞ்சை நிறுத்திக் கொண்டிருப்பதும் பாம்பை அணிந்திருப்பதும் பேய்க்கணங்களுக்குத் தலைவனாய் பூதநாயகனாய்

இருந்ததும் ஆகிய செயல்கள் எல்லாம் பித்தன் செய்கின்ற செயல்கள் அல்லவா என்று கேட்கும் தொனியில்

*"காதிலே பாம்பையிட்டீர் கழுத்திலே*
*நஞ்சையிட்டீர் கனபேய் கொண்டீர்*
*ஆதவாலுமைப் போலும் பித்தருண்டோ"*

(பாடல் 9)

என்று கேலி பேசுகின்ற திரிகூடப் பெண்ணமுதை நோக்கி,

*"கேட்டியுங்க ளண்ண னான*
*கண்ணன் முதல் வரகுதின்று வாயாலெடுத்த*
*பண்டைக் கதை கேளாயோ*
*மண்ணிலொரு காற்சிலம்பைக் கையிலிட்டான்*
*பெண்ணொருத்திக் காயொருத்தி புடவைகிழித்*
*தானவனே பித்த னாமே"*

என்று கண்ணன் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்த நிகழ்ச்சியையும். கடலில் ஒளித்த வைக்கப்பட்ட பூமி தேவியை மீட்கக் கடலாகிய ஆடையைக் கிழித்துக் கொண்டு போனதையும் சொல்லிக் கேலி செய்கின்றார், இறைவன்.

உடனே குழல்வாய்மொழி அம்மையார் 'பித்தன் என்றும் பார்க்காமல் பெண் கொடுத்துச் சீர் செய்த என் அண்ணனுக்கு நீங்கள் காட்டுகின்ற நன்றி இதுதானோ' என்ற பொருள் படும் படியாக.

*"பித்தனென்றும் பாராமற் பெண் கொடுத்தான்*
*அவனோடு பிறந்த வாசிக்*
*கித்தனைபெண் சீருமிட்டான் கையம்பா*
*வுமக்கிருந்தா னெந்தநாளும்*
*மைத்துனனைப் பாராட்டி எங்களண்ணன்*
*செய்த நன்றி மறந்ததாலே*
*சக்திபீ டத்துறைவீர் செய்த நன்றி*
*நீர் மறந்த சங்கை தானே"*

(பாடல் 11)

என்று குழல் வாய் மொழி இயம்பிட

*"மங்கைகுழல் வாய்மொழியே உங்களண்ணன்*
*செய்த நன்றி மறந்ததாலே*
*எங்கெல்லாம் பால்திருடி எங்கெல்லாம்*
*அடிபடவு மேது வாச்சே"*

(பாடல் 12)

என்று இறைவன் பதில் தர, குழல்வாய்மொழி,

*"காய்ச்சிய பால் கண்ணனுண்டான் வேடனெச்சில்*
*நீர்கலந்தீர் கருணையாமா*
*ஆய்ச்சியர்கை யாலடிபட் டானையரே நீர்*
*பேடிகையா லடிபட்டீரே"*

(பாடல் 13)

என்று சொல்லி சுந்தரர் பித்தன் என்று இறைவனை ஏசியதையும், கண்ணப்ப நாயனார் எச்சில் நீரால் வழிப்பட்டதையும் அருச்சுனன் பேடியாய் இருந்த பொழுது சிவனை விற்பிரம்பால் அடித்ததையும் சொல்லிக் கேலி செய்ததை.

*"உமையவளே தமையனுனக் கருமையென்றா*
*னமக்குமவ னருமை யாமே*
*நமையுமோர் குறையுரைத்தாய் நாமவனைச்*
*சரசமா நவின்றோங் கண்டாய்*
*இமையவர்கள் வேண்டுதற்கா யித்தனையும்*
*பொறுத்தருள்வா யிமய மாதே"*

(பாடல் 18)

என்ற பாடலால் அறியலாம். குற்றால நஞ்சையுண்டு செமிக்கும் இறைவா நீர் எனக்கு அளிக்கும் பொன்னும் பூணும் போதாது என்றுரைக்க, இறைவனோ

*"சொன்னமலை தனதாச்சுப் பொன்னுலகு*
*வெள்ளிமலை சொந்தமாயிற்*
*றின்னமொரு பொருளுமுண்டோ பெண்கள்*
*பேதமைக்குணந்தா னிதுபோலுண்டோ*
*வுன்னரிய விளைநிலமு நன்னகர*
*நவநிதியு முனக்கே யென்று*
*பன்னிகுழல் வாய்மொழியே பாலித்தோம்*
*பட்டயமும் பாலித்தோமே"*

(பாடல் 20)

என்று எல்லாம் உனக்காகவே என்றுரைத்துப் பொருள் கொடுத்து ஊடல் தீரப் பெறுகின்றனர். முக்கூடற்பள்ளு போன்றவற்றில் மூத்த பள்ளியும் இளைய பள்ளியும் ஊடல் தீர்ந்து. கூடிக்கொள்வது போல இங்கே இறைவனும் இறைவியும் இணைகின்றனர்.

இத்தகு சிறப்புடைய இச்சிறுநூலில் சைவ வைணவப் போராட்டமும் புராணக் கருத்துகளும் இடம் பெற்றுள்ளதை அறியலாம்.

## திருக்குற்றாலக் கோவை

அகப்பொருள் துறைகளை நிரல்பட அமைத்துக் கற்பனைச் செறிவுடன் கட்டளைக் கலித்துறைச் செய்யுளால் பாடும் சிற்றிலக்கிய வகையே கோவை என்பதாகும். மணிகளை ஓரினமாக ஒழுங்காகக் கோப்பது போல் அகப்பொருட்கிளவிகளைக் கோப்பது கோவையாகும். திருக்குற்றாலக் கோவையிலும் அகத்துறைப் பாடல்கள் ஓரினமாகக் கோக்கப் பட்டுள்ளன.

''கோவை நூல் மேலோட்டமாகப் படிப்பதற்கு ஒரு தலைவன் தலைவியர் வாழ்வை நாடகப் போக்கில் விளக்குவதாக இருப்பினும் அது ஆன்மா இறைவனைத் தேடுதல் என்னும் உள்ளுறைப் பொருள் கொண்டுள்ளது'' என்பர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார்.

திருக்குற்றாலக் கோவை நூலில் கிடைத்துள்ள ஐம்பத்தெட்டுப் பாக்களை மட்டும் திருக்குற்றாலக் கோயில் சார்பாக 1954- ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளனர். கைக்கிளையில் நான்கும். இயற்கைப் புணர்ச்சியில் பதினைந்தும், வன்புறையில் ஆறும், தெளிவில் ஒன்றும், பிரிவுழி மகிழ்ச்சியில் இரண்டும் பிரிவுத் துயரில் ஐந்தும் இடந்தலைப்பாட்டில் ஐந்தும். பாங்கற் கூட்டத்தில் இருபதும் எனப் பாடல்கள் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

சுந்தரருக்காக இறைவன் பரவை நாச்சியாரிடம் தூது சென்றதை,

*''சுந்தரர்க்குத் துயர் தீர்த்தார் நடந்தொரு தோகையினான''*

(பாடல்-6)

என்ற பாடல் வரியால் காணலாம்.

மாதொரு பாகத்தர் குற்றாலர் காமனை எரித்த நிகழ்ச்சி.

*''சரத்தை விட்டே மதன காமத் தழல் கொளுத்தச் சுட்டு''*

(பாடல்-14)

என்று குறிக்கப்படுகிறது. முப்புரம் எரித்ததை

*"ஒன்னலர் முப்புரங் காய்ந்த குற்றாலர்"*

(பாடல்-25)

என்பதானல் அறியலாம். மானை இடத்தும் மழுவை வலத்தும் ஏந்திய செய்தி.

*"மானே யிடத்து மழுவே வலத்தினும் வைத்துயிரோ*
*டூனே யெனவு மிசைந்த குற்றாலர்"*

(பாடல் 24)

என்ற வரிகளில் வருகின்றது.

வள்ளியை மணம்புரிய விரும்பி முருகன் வேங்கை மரமாக நின்ற கந்தபுராணச் செய்தியும், இந்திரசித் நாகாத்திரத்தைப் பயன்படுத்திப் பகைவர்களைக் கட்டிய இராமயணச் செய்தியும் இக்கோவையில் இடம் பெற்றுள்ளன.

# 3
# நாடக ஆசிரியர்

**தி**ரிகூடராசப்பக் கவிராயரின் புகழ்பெற்ற நூலான 'குறவஞ்சியில்' அமைந்து கிடக்கும் நாடக இலக்கியப் பண்புகளைக் காணலாம். நாடகத் தமிழைப் பற்றிய குறிப்பை நாம் தொலகாப்பியத்தில்.

*''நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்*
*பாடல் சான்ற புலனெறி வழக்கம்''*

என வரும் நூற்பாவால் அறியலாம். சிலப்பதிகாரத்திற்குக் குறிப்புரை எழுதிய அடியார்க்கு நல்லார் பரதம். பஞ்ச பாரதீயம், பரதசேனாபதீயம், சயந்தம், மதிவாணன் நாடகத் தமிழ் நூல் என்பவற்றோடு இன்னும் பல நூல்களைக் குறிக்கின்றார். எனினும் எதுவும் இதுவரை கிடைக்கவில்லை. இராசராசசோழன் காலத்தில் 'இராசராசசோழன்' நாடகம் நடைபெற்றது என்பதைத் தஞ்சைக் கோயில் கல்வெட்டினால் அறிகின்றோம்.

மீனாட்சியம்மன் குறம் போன்ற 'குற' இலக்கிய வகை 17-ஆம் நூற்றாண்டில் தோன்றிற்று. பின்னர் குறவஞ்சி இலக்கிய வகையில் கும்பேசர் குறவஞ்சியும், தியாககேசர் குறவஞ்சியும், சகசிராசன் குறவஞ்சியும் தோன்றின. இக்காலச் சூழலில் தான் முக்கூடற்பள்ளு போன்ற உழைக்கும் மக்களைப் பற்றிய பள்ளு நாடகங்கள் தோன்றிப் புகழ்ப் பரப்பின. இந்தக் காலக்கட்டத்தில் தான் திரிகூடராசப்பக் கவிராயர் குற்றாலக் குறவஞ்சியைப் படைத்தார். இலக்கியத் தரம்மிகுந்து காணப்பட்டதாலும் ஆடல் பாடல்களுடன் கூடிய இசை நாடகமாக விளங்கியதாலும் மக்களிடையே அதிக வரவேற்பினைத் திருக்குற்றாலக் குறவஞ்சி பெற்றது. குறவஞ்சி என்றாலே குற்றாலக் குறவஞ்சிதான் என்னும் பெருமையை இந்நூல் எட்டியது. அதனால் இதுவே முதலில் தோன்றியது என்றும் கருத வைத்தது.

## குறவஞ்சி நாடகம்

குற்றாலக் குறவஞ்சி ஆசிரியரே இதனைக் 'குறவஞ்சி நாடகம்' என்றே குறிப்பிடுகின்றார். குற்றாலக் குறவஞ்சியின் சிறப்புப் பாயிரச் சைவ சமய குரவர் வணக்கத்தில் ''செழித்த குறவஞ்சி நாடகத்தைப் பாட'' எனவும், நூற்பயன் கூறுமிடத்து.

*"பல்வளஞ்சேர் குறவஞ்சி நாடகத்தைப்*
*படிப்பவர்க்கும் கேட்பவர்க்கும் பலனுண் டாமே"*

எனவும் கூறியிருத்தலாலும் 'குறவஞ்சி' நாடக நூலாகவே யாக்கப் பெற்றதென்பது புலனாகும்.

திருக்குற்றாலக் குறவஞ்சி நாடகமாகவே எழுதப் பெற்றதென்பதற்கான இன்னொரு இன்றியமையாத சான்றையும் காணலாம். இந்நூலை எழுதித் தருமாறு பணித்த முத்து விசயரெங்க சொக்கநாத நாயக்கரும்,

"திருக்குற்றாலம் ராஜப்பன் கவிராஜருக்குப் பொறுப்புப் பட்டயம் எழுதிக் கொடுத்தப்படி சுவாமி திருக்குற்றால நாதர் பேரில், குறவஞ்சி நாடகம் பாடி அரங்கேற்றினதற்கு ..." என்று தாம் எழுதிக் கொடுத்த செப்பேட்டில் குறித்திருப்பதால் குற்றாலக் குறவஞ்சி, நாடக நோக்குடனேயே நாடகப் பாங்குகள் அமைய எழுதப்பெற்றது என்பது தெளிவாகும்

## நாடக அமைப்பு

நாடகம் உரைநடையில் அமைவதை விடச் செய்யுள் வடிவில் அமைவதே சிறப்புடைத்தாகும் என்பது அறிஞர் கருத்தாகும். அறிஞர் எலியத்து என்பாரும் "செய்யுள் வடிவில் நாடகம் அமைதல் போற்றத்தக்கது" என்கிறார்.

இக்கருத்திற்கேற்ப் குறவஞ்சி நாடகமும் செய்யுள் வடிவிலேயே கவினுற அமைந்துள்ளதைக் காணலாம். நாடக நூல்களில் உணர்ச்சிக்கும். உணர்வுகள் நிரம்பிய மெய்ப்பாடுகளுக்குமே முதலிடமாகையால், உணர்வையும், மெய்ப்பாடுகளையும் நன்முறையில் வெளிப்படுத்த வல்லதாகிய செய்யுள் வடிவமே பேணப்பட்டதும் ஏற்புடையதேயாகும்.

## நாடகப் பகுப்பு

குறவஞ்சி நாடக மரபு பற்றி டாக்டர் மு. வரதராசனார் கூறுகிறார். "இந்நாடகத்தில் தலைவன் ஒருவன் (மனிதன் அல்லது தெய்வம்) உலா வருவதாகவும். தலைவி தெருவில் வந்து அவனைக் கண்டு காதல் கொள்வதாகவும், காதலால் வருந்தித் திங்கள். தென்றல் முதலியவற்றைப் பழிப்பதாகவும், தலைவி பாங்கியைத் தூது அனுப்புவதாகவும், அவ்வழியே குறத்தி ஒருத்தி வருவதாகவும், அவள் தன் மலைவளம் முதலியவற்றைப் புகழ்வதாகவும், தலைவி அவளைக் குறி கேட்பதாகவும் குறத்தி தலைவியின் மனம் மகிழக் குறி கூறுவதாகவும், குறவன் அவளைத்

தேடி வருவதாகவும், அவள் பரிசிலாகப் பெற்ற அணிகலன்களைக் கண்டு அவன் ஐயுற்றுக் கேட்பதாகவும், அவள் தான் குறி கூறிப் பரிசு பெற்றது ப்பற்றிக் கூறுவதாகவும் இந் நாடகம் அமைப்பது மரபு.

இன்றைய நாடக நூல் அமைப்பின்படி இக் குறவஞ்சி நாடகத்தை ஐந்து களங்களாக அமைக்கலாம். கட்டியங்காரன் தோன்றி குற்றாலநாதர் பவனி வருவதையுரைத்தலும், பவனியைக் காணப் பாவையர் வருவதும், அவர்களுள் சிறந்த வசந்தவல்லி பந்தடிப்பது வரை உள்ள காட்சிகள் முதற்களம்; எழில் நலன் மிக்க வசந்தவல்லி பவனி வரும் குற்றால நாதரைக் கண்டு மயங்கி நெஞ்சைப் பறிகொடுப்பதும், அவளுடைய காதல் ஏக்கமும், அவளும் தோழியரும் புலம்பலும் பின்னர் தோழியைத் தூது அனுப்பலும் ஆகிய நிகழ்வுகள் வரை இரண்டாம் களம். குறத்தி வருகை, வசந்த வல்லி குறி கேட்டல், குறி முகம் கூறல், பரிசு பெறல் ஆகிய நிகழ்வுகள் வரை மூன்றாம் களம்; சிங்கன் வருகையும், குருவி வேட்டையாடலும், சிங்கியை நினைத்து சிங்கன் பிரிவாற்றாமையால் ஏங்கி அவளைத் தேடி அலைதலும் ஆகிய காட்சிகள் வரை நான்காம் களம்; சிங்கன் சிங்கியைக் கண்டு உரையாடலும் இறுதியில் குற்றாலநாதரை வாழ்த்தி வணங்குதலும் ஆகியவை ஐந்தாம் களம்; என காட்சிகளை ஐந்து களங்களுக்குள் அடக்கலாம்.

## போராட்டமும் சிக்கலும்

போராட்டமோ, சிக்கலோ இல்லாமல் அமைந்த புதினமோ, நாடகமோ சிறக்காது. சேக்சுபியரின் நாடகங்களின் வெற்றிக்குக் காரணம் அவரின் நாடக மாந்தர்களுக்கிடையே ஏற்படும் போராட்டங்களும் சிக்கல்களும், அவை காண்பவர்களுக்கு ஏற்படுத்தும் ஆவலும் தான். பார்ப்பவர்களின் வேட்கையை வளர்த்தல் நாடகத்தின் வெற்றிக்கும், சிறப்புக்கும் அரணாகும். குறவஞ்சி நாடகத்தில் மிகப்பெரிய போராட்டங்களும், சிக்கல்களும் உருவாக்கப் பெறவில்லையென்றாலும், இறைவன் மேல் காதல் கொண்ட வசந்தவல்லியின் உளப் போராட்டத்தையும், குறத்தியைத் தேடியலையும் குறவனின் மனப்போராட்டத்தையும் நிரல்படக் கூறியிருக்கின்ற முறை "வேட்கையை வளர்த்தல்" என்னும் நாடக உத்தியைப் பின்பற்றிய முறையேயாகும்

## இணைவும் முரணும்

சிறப்பான நாடகத்திற்கு இணைவு என்னும் பண்பும், முரண் என்னும் பண்பும் அமைதல் வேண்டும். இணைவு என்னும் பண்பு நாடகத்தின்

மையமான ஒரு நிகழ்ச்சியோடு அது போன்ற மற்றொரு நிகழ்ச்சியும் அமைவதாகும். காட்டாக மனோன்மணீயம் நாடகத்தில் மனோன்மணி காதலிப்பதுபோல் வாணி எனும் தோழியும் காதலிக்கின்றாள் இதைப் போலவே வசந்தவல்லி இறைவனைக் காதலிப்பது போலவே சிங்கன் சிங்கியைக் காதலிப்பதும் சொல்லப் படுகின்றது. முரண் என்பது தலைவனுக்கு மாறான பண்புடைய கதை மாந்தரைப் படைத்தலாகும். குற்றாலக் குறவஞ்சியின் நெடிதுயர்ந்த பண்பாடு மிக்க தலைவனாக இறைவன் படைக்கப்பட்டுள்ளமையும், எளிய முறையில் சிங்கன் படைக்கப்பட்டுள்ளமையும் ''முரண்'' என்னும் நாடகப் பண்புகளுக்கு காட்டாகும்.

## மக்களின் காதல்

குறவர்களின் காதல் வாழ்க்கையிலேயே சிறந்த பண்பை திரிகூடராசப்பக்கவிராயர் காட்டியிருப்பது பாராட்டத்தக்கது. சிங்கன் தன் காதலி சிங்கியைப் பல நாட்கள் கழித்துக் குற்றால வீதியிலேயே காண்கிறான். அவனது உணர்வுகள் காதல் ஏக்கத்தில் துடித்தனவாயினும் நடுவீதியில் இருவரும் கட்டித் தழுவிட முடியாத நிலையை அடையப் பெற்ற அவர்களை ஆசிரியர் நனி நாகரிகத்துடன் காட்டுகின்றார்.

*''வீதி வந்து குறுக்கிடவே நாணம் பூண்ட*
*விண்ணாணச் சிங்கிதனைக் கண்டு சிங்கன்*
*தூதுவந்த நளன் ஆனான்; கன்னி மாடம்*
*துலங்குதமயந்தி அவள் ஆயினாளே''*

என்று வீதியிலே கண்டு கொண்ட குறவர் தம் பண்பாட்டுடன் நடந்து கொண்ட முறையை ஆசிரியர் தெளிவுற விளக்குகின்றார். ''சேலைஉடைதனைச் சற்றே நெகிழ்க்கவோ சிங்கி'' என்று கேட்கும் சிங்கனுக்கு அவள். ''நாலு பேர் முன் எனை நாணங்குலையாதே சிங்கா'' என்று மறுத்துப் பதிலிறுக்கிறாள். இக்காட்சிகளிலெல்லாம் நாடக ஆசிரியரின் நல்லிசைப் புலமைத் திறனையும் மரபு போற்றும் மாண்பினையும் காணலாம்.

## பாத்திரப் படைப்பு

ஒரு நாடகத்தின் சிறப்பு அந்நாடகத்தில் படைக்கப்பட்டுள்ள கதை மாந்தர்களின் பண்பு நலன்களைப் பொறுத்தே அமையும். குற்றாலக்

குறவஞ்சியின் கதை மாந்தர்களாக வரும் அனைவரும் தலைசிறந்த பாத்திரப் படைப்புகளாக இருப்பதே நாடக ஆசிரியரான திரிகூட ராசப்பக் கவிராயருக்குக் கிடைத்த வெற்றியாகும். நாடக மாந்தரைப் படைக்கும் போது அவர்களின் செயல்கள் தெளிவாக விளக்கப்படல் வேண்டும். அவர்களின் பண்புகள் புலப்படுமாறு நிகழ்ச்சிகள் அமைக்கப்பட வேண்டும்.

## பாத்திரப் படைப்பும், உரையாடற் சிறப்பும்

பாத்திரப் படைப்புகளில் இன்னொரு இன்றியமையாதது யாதெனில் பாத்திரங்கள் ஒவ்வொருவரும், நாடகத்தில் பிறிதொரு மாந்தராலேயே விளக்கம் பெறுதல் வேண்டும் என்பதாகும். பாத்திரங்கள் ஆசிரியர் கூற்றுக்களால் அமைவது சிறப்புடையதாகாது. வசந்தவல்லியின் பேரழகைக் குறத்தியின் வாயிலாகவும் குறவஞ்சியின் எழிலை வசந்தவல்லி வாயிலாகவும் புலப்படுத்தும் திறன் போற்றத் தக்கது. இத்தகு படைப்புக்களால் ஆசிரியரின் நாடகப் புலமை புலனாகும்.

நாடக நூலின் தனிச் சிறப்பே, கற்றாரே அல்லாமல் மற்றோரும் கேட்டு இன்புறத் தகுந்த முறையில் இருப்பதாகும். எனவே மக்கள் சமுதாயத்தில் பேசும் கொச்சைச் சொற்களும் இடையிடையே வருதலுமுண்டு. உலகப் புகழ்பெற்ற நாடக நூலாசிரியரான சேக்சுபியரின் நாடகங்களிலும் கொச்சைச் சொற்கள் பயின்று வருவதையும், அவை அக்காலத்திய நிலையைக் காட்டுவதாக உள்ளது என்று அறிஞர்கள் கூறுவதையும் சான்றுகளாகக் கொள்ளலாம்.

ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியத்திலும்,

*''சேரி மொழியாற் செவ்விதின் கிளந்து*
*தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றிற்*
*புலனென மொழிப புலனுணர்ந் தோரே''*

(பொருள் செய்யுளியல் நூற்பா.553)

என்ற குறிப்பும் கிடைக்கின்றது. ''சேரி மொழி என்பது பாடி மாற்றங்கள். அவற்றானே செவ்விதாகக் கூறி ஆராய்ந்து காணாமைப் பொருட்டொடரானே தொகுத்துச் செய்வது புலன் என்று சொல்வர் புலனுணர்ந்தோர். அவை விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வன என்பது கண்டு கொள்க'' என்ற பேராசிரியர் உரையினின்றும் சேரி மொழியைச் செவ்விதாய்ப் பயன்படுத்துதல் நாடக நூல்களுக்கே சாலும் எனும் பொருள்

தெளிவாகின்றது. குறவஞ்சியில் சுற்றுப்புறச் சூழலுக்கேற்பவும், பாத்திரங்களுக்கேற்பவும் சேரி மொழிகள் பயின்று வருவதைக் காணலாம்.

## உரையாடல்

நாடக மாந்தர்களின் உரையாடல்கள் இயற்கையாக அமைதல் வேண்டும். உலக வாழ்க்கையில் அவர்களின் நிலையில் உள்ளவர்கள் எவ்வாறு பேசுவார்களோ அவ்வாறு பேச்சுக்கள் அமைதல் வேண்டும். இந்தக் கருத்தையும் குறவஞ்சியின் நாடகம் அமையப் பெற்றிருக்கும் முறையை நோக்க, நாடகப் பாங்கின் முழுத்தன்மையும் குறவஞ்சி பெற்றிருப்பதை உணரலாம். நாடகத்தில் வரும் மாந்தர்கள் அவரவர்களின் பாத்திரத்திற்கேற்ப உரையாடுகின்றனர். உரையாடல் இயற்கையாக அமைந்துள்ளது. உயர் குடிப்பெண்ணாக வரும் வசந்த வல்லி என்பாளின் பேச்சு அவளின் பாத்திரத் தன்மைக்கேற்பச் செந்தமிழில் பேசுகிறாள். உலக அனுபவம் மிகுந்த குறத்தியோ சேரி மொழியோடு செந்தமிழும் பேசும் ஆற்றல் பெற்றிருக்கின்றவளாகக் காட்டப் பெறுகின்றாள். கவிராயரின் குறவஞ்சிக்குப் பின்னெழுந்த சரபேந்திர பூபாலக் குறவஞ்சியில் வரும் குறத்தி தெலுங்கு, கன்னடம், ஆங்கிலம் முதலிய பிறமொழிச் சொற்களையும் கலந்து பேசும் ஆற்றல் பெற்றவளாகக் காட்டப் பெறுகிறாள்.

மறைத்திரு மறைமலையடிகளார் தனித்தமிழார்வம் மிக்குடையவர். தனித்தமிழ் இயக்கத் தந்தையும் அவரே, அவரது ''கோகிலாம்பாள் கடிதங்கள்'' என்னும் புதினத்தில் சில மாந்தர்களை வட சொற்களையும், கொச்சைத் தமிழ்ச் சொற்களையும் இடையிடையே பேசுமாறு படைத்துக் காட்டுகிறார். அங்ஙனம் படைத்த மறைமலை அடிகளார்.

> **''இந்நூற்கண் வருந்தலைவி கோகிலாம்பாளும், அவளுக்கு முதல் உறவினரும், பார்ப்பன இனத்தைச் சேர்ந்தவர்களா யிருந்தலானும், அவள் தந்தையாகிய பாரசிகர் வட நாட்டவராதலாலும், அவர்களுடைய உரையாட்டுக்களில் இடையிடையே வட சொற்களுஞ் சில கொச்சைத் தமிழ்ச் சொற்களுங் கலந்திருத்தல் காணலாம்''**

என்று சொல்கிறார்கள். இதற்குக் காரணம் புதின மாந்தர்களைப் படைக்குங்கால் இயற்கைத் தன்மை கெட்டு விடாமலிருத்தற் பொருட்டே யெனலாம். இக்கருத்தினடிப்படையில் அமைந்த குற்றாலக் குறவஞ்சியின் அமைப்பையும் நோக்கலாம்.

வசந்தவல்லி, இலவுக்கும் சிவந்த வாயால், கார்வளர் குழலார், சீர்வளர் குறி போன்ற செந்தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்த, குறத்தியோ பாத்திர இயல்புக்கேற்ப ''அம்மே! அம்மே'' எனப் பாடுதலைக் காண்கிறோம். ''மானே வசந்தப் பசுங்கொடியேகானேறும் கைம்மலர் காட்டாய்'' எனவும் குறத்தி தன் அனுபவத்திற்கேற்ப தூயமொழி பேசுதலையும் காணலாம்.

## நாடக மாந்தர்

குறவஞ்சி நாடகத்தில் கட்டியங்காரன், திருக்குற்றாலநாதர், வசந்தவல்லி, அவளது தோழியர், குறவஞ்சி சிங்கி, குறவன் சிங்கன், அவனது தோழன் நூவன், ஏகன், நாகன், எலியன், புலியன் முதலான கதை மாந்தர் பலர் இடம்பெறுகின்றனர். எனினும் அவர்களிலேயே உயிர் ததும்பும் ஓவியங்களாக உருவாக்கப்பட்டு இருப்பவர் மூவரே ஆவர். பாட்டுடைத் தலைவி வசந்தவல்லியும், அவளுக்குக் குறி சொல்ல வரும் குறவஞ்சி சிங்கியும், சிங்கியைத் தேடி வரும் சிங்கனுமே அம்மூவர் ஆவார். அவர்தம் பண்புநலன்களைக் காணலாம்.

## தொடக்கக் காட்சியும் கட்டியங்காரனும்

நாடக மாந்தரை அறிமுகப் படுத்தும் பொருட்டு தொடக்கத்தில் கட்டியங்காரன் வருவது மரபு. நாடக மாந்தர்களின் செயல் பற்றியும், புகழ் பற்றியும், விளக்குவது அவன் கடமை. தற்கால நாடக அமைப்பில் அத்தகு நிலை இல்லை. எனினும் பேராசிரியர் சுந்தரம்பிள்ளையவர்களது தீந்தமிழ் நாடகமான மனோன்மணீயத்தில் சுந்தர முனிவரைச் சேவகர்கள் அறிமுகப்படுத்துவதுபோல அமைந்துள்ள முதலங்கத்தின் முதற்களம் கட்டியங்காரன் செய்யும் கடமையையும், அவனது மரபையுமே நினைவூட்டுவதாக அமைந்திருக்கும் திறத்தையும் காணலாம். புகழ்பெற்ற நாடக ஆசிரியரான சேக்சுபியரின் நாடகங்களிலும் கட்டியங்காரன் போன்ற பாத்திரத்தையும், அவன் கதை மாந்தர்களை அறிமுகப் படுத்துவதையும் காணலாம். காட்டாக, 'அந்தோணியும் கிளியோபாத்ராவும்' என்னும் நாடகத்தின் தொடக்கக் காட்சியில் பிலோ என்பான் முதலில் அந்தோணியின் புகழையும், அவனது சில செயல்களையும் சொல்லிக் கொண்டேயிருக்க நாடகம் தொடங்குவதானது நாடக மாந்தர்களை அறிமுகப்படுத்தும் ஒரு செயலாகக் கருதலாம்.

## குறவஞ்சியில் கட்டியங்காரன்

நாடகத்தின் தொடக்கத்தல் வரும் கட்டியங்காரன் மிகவும் கருநிறம் கொண்டவன், முப்புரி நூலினை மார்பிலே அணிந்துள்ள அவன் நீண்ட பிரம்பினைக் கையில் உடையவனாய் குற்றால வீதியிலே வருகின்றான். இன்னின்னார் அரங்கத்தில் தோன்றுகின்றனர் என அறிமுகப்படுத்தல் மட்டுமே அவனது பணியாகும் பாட்டுடைத் தலைவர் திரிகூடநாதர் பவனி வருதலை.

> *"தேக்கெழுந்த மறைநான்கும் சிலம்பெழுந்த*
> *பாதர் விடைச் சிலம்பில் ஏறி*
> *மேக்கெழுந்த மதிசூடிக் கிழக்கெழுந்த*
> *ஞாயிறு போல் மேவினாரே"*

(பாடல்-3)

என்றும்,

> *"சிவனுமாய் அரி அயனுமானவர்*
> *கவன மால்விடை அதனில் ஏறியே பவனி வந்தனரே"*

என்றும், குறும்பலாவுறை மவுன நாயகனாம் இறைவனின் பவனியை அறிமுகப்படுத்துவதோடு அவன் பணி நிறைவடைந்து விடுகிறது.

## பாட்டுடைத் தலைவர் திருக்குற்றாலநாதர்

நாடகத்தில் தோன்றும் அனைத்துக் கதை மாந்தர்களாலும் பாராட்டப்படுபவர் பாட்டுடைத் தலைவர் திரிகூடநாதரே ஆவர். நாடகத்தின் முதற்காட்சியில் எழுவகைப் பருவ மகளிரும் கண்டு காமுறும் வண்ணம் உலா வருபவர் அவரே ஆவார். அப்பவனிக் காட்சியுடன் அவரது பங்கு நிறைவு பெறுகின்றது. ஆயினும் அவரைப் பற்றிய சிறப்புச் செய்திகள் நூல் முழுவதும் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளன. பாட்டுடைத் தலைவர் பெருமையை எடுத்துரைப்பதற்காகவே ஏனைய பிற கதை மாந்தர்கள் படைக்கப் பட்டுள்ளனர்.

## பாட்டுடைத் தலைவி வசந்தவல்லி

அழகின் வடிவாகப் படைக்கப் பட்ட உயிரோவியம் தான் வசந்தவல்லி. அறிவை மயக்கும் ஒரு கருவம் இருக்கும் மங்கைப் பருவத்தளாகிய வசந்தவல்லி ஏதும் அறியாதவள் போல் நாடகமாடிக் கொண்டு ஒய்யாரமாக நடந்து ஓர் ஓவியம் போல் வருகிறாள். அவள், இருண்ட மேகஞ்சுற்றிச் சுருண்டு சுழி எறியும் கொண்டையை உடையவள்

என்றும், அவளது திருமேனியின் எழிலைக் கவிராயர் போற்றிப் புகழ்கின்றார் அன்ன நடையில் ஒரு சின்ன நடை பயின்று தாவித் தாவிக் குதிக்க வேண்டும் என்ற ஆர்வத்தினாலோ தாங்க முடியாத பருவச் செழிப்பின் குறும்பினாலோ அவள் தோழியருடன் பந்தாடத் தொடங்குகின்றாள். அக்காட்சியைக் கண்டால் ஆடவர் உலகமானது என்ன பாடுபடுமோ என்று கவலைப்படும்படி அவள் பந்தாடிக் கொண்டிருந்தாள். நன்னகர் வீதியிலே நாடகம் ஆடிய தோகை மயிலென வசந்த ஒய்யாரி அடர்ந்து பந்தாடினாள்.

*"இந்திரையோ யிவள் சுந்தரியோ தெய்வ ரம்மையோ*
*மோகினியோ - மன*
*முந்திய தோவிழி முந்தியதோ கர*
*முந்தியதோ என"*

அவள் பந்தாடிய பாவனையைக் காண பிரமன் நமக்கு ஆயிரம் கண்களைப் படைக்கவில்லையே என்று ஆடவர் உலகம் எண்ணி ஏங்கிக் கொண்டிருக்க அவள் பந்தாடிக் கொண்டிருந்தாள். அப்பொழுது குறும்பலா ஈசர் உலா வந்தார். கண்டதும் மனம் ஈடுபட்டு மையலுங் கொண்டு.

*"மோகம் என்பதிதுதானோ - இதை*
*முன்னமே நான் அறிவேனோ?*

என்று புலம்பித் தவிக்க லுற்றாள்.

*"குளிர்ந்த அமுதத்துடன் பாற்கடலில்*
*தோன்றிய நிலவே அந்தக் குளிர்ச்சியான*
*தன்மைகளை எல்லாம் ஏன் மறந்து விட்டாய்"*

என்றும் புலம்புகிறாள்.

*"தண்ணமுதுடன் பிறந்தாய் வெண்ணிலாவே - அந்தத்*
*தண்ணளியை ஏன்மறந்தாய்? வெண்ணிலாவே*
*பெண்ணுடன் பிறந்ததுண்டே வெண்ணிலாவே - என்றன்*
*பெண்மைக்கண்டும் காயலாமோ வெண்ணிலாவே?"*

என்று காதல் ஏக்கத்தில் புலம்பிய அவள் தோழியைத் தூது அனுப்புகின்றாள். தூது போகும் தோழியிடம்.

*"வந்தால் இந் நேரம் வரச்சொல்லு வராதிருந்தால்*
*மாலையா கிலுந்தரச் சொல்லு குற்றாலநாதர்*
*தந்தாலென் நெஞ்சைத் தரச்சொல்லு தராதிருந்தால்*
*தான்பெண்ணா கியபெண்ணை நான் விடேன் என்று"*

(தூது நீ)

கண்டிப்பாகப் பேசுவது போல் சொல்லி அனுப்புகிறாள். குற்றால நாதரிடம் தோழி தூது சென்றதும் வசந்தவல்லி ஏக்கத்தில் மயங்கித் தவித்துக் கொண்டிருந்தாள். அந்த வேளையிலே வஞ்சிக் கொடி போன்ற குறவஞ்சியாகிய சிங்கி. இன்ப மோகினியாகிய வசந்தவல்லியின் மித மிஞ்சிய காதல் நோய்க்கு ஒரு சஞ்சீவி மருந்தினைப் போல் வந்து சேர்ந்தாள் குறவஞ்சியைக் கண்டதும் வசந்தவல்லி.

*"இலவுக்ககும் சிவந்த வாயால் எனக் கொரு குறி*
*சொல்வாயே."*

என்று வேண்டினாள். அவள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவர் திரிகூடநாதர் என்று சொன்ன உடனே அந்தச் சேல்விழிப் பெண் நாணித் தலை கவிழ்ந்தாள். மனம் மகிழ்ந்த வசந்தவல்லி தான் தேடிவைத்திருந்த அனைத்து வகை நகைகளையும் குறவஞ்சிக்குப் பூட்டி அனுப்பியது அவளது கொடை உள்ளத்தையும் காதல் நெஞ்சத்தையும் காட்டும் செயலாகும்.

## குறவஞ்சி சிங்கி

குறவஞ்சியில் சிங்கிதான் முதன்மைப் படைப்பு ஆகும். பாட்டுடைத் தலைவி நாடகத்தின் முற்பகுதியில் மட்டும்தான் வருகின்றாள். இடைப்பகுதியில் வந்தாலும் நாடகத்தின் இறுதிவரை நின்று நிலைந்து நாடகத்தை நடத்திச் செல்லும் நாடகக்காரி குறவஞ்சிக் கொடியான சிங்கியேயாவாள். வளையல்கள் நிரம்பிய தன் கைகளை அசைத்தவாறே மந்திரக் கோலினை ஏந்திக் கொண்டு மணிக் கூடையினையும் இடுப்பிலே தாங்கிக் கொண்டு, திருநீற்றை அணிந்த நெற்றியிலே பொட்டிட்டுக் கொண்டு சிறந்த பாசிமணி மாலையும், குன்றி மணி மாலையும் அணிந்து கொண்டு கண்டவர் போற்றும் வடிவோடு பூத்த மலர்க் கொடியானது அப்படியே நடந்து வருவது போல வஞ்சிக் கொடி குறவஞ்சி வந்தாள். இத்தகு எழில்மிகு கோலத்தோடு குறிசொல்ல வரும் குறத்தி,

*"மொழிக் கொரு பசப்பும் முலைக்கொரு குலுக்கும்*
*விழிக்கொரு சிமிட்டும் வெளிக்கொரு பகட்டுமாய்*
*உருவசி அரம்பை கருவமும் அடங்க*
*முறுவலின் குறும்பால் முனிவரும் அடங்க"*

(பாடல்-61)

வருகின்றாள் என்று ஆசிரியர் திரிகூடராசப்பக் கவிராயர் குறத்தியின் நடையுடை பாவனைகளையும் மெய்ப்பாடுகளையும் கவினுறக் காட்டுகின்றார்.

வஞ்சிக்கொடிபோல் வந்த குறவஞ்சியைக் கண்டு மகிழ்ந்த வசந்தவல்லி.

*''துவளும் இடைத்தவள நகைப் பவள இதழ்த் தையலே-உன்*
*சொந்த மலை எந்த மலை யந்த மலை வளமெனக்குச் சொல்''*

(பாடல்-66)

என்றாள் குற்றாலத் திரிகூடர் மலையெங்கள் மலையே என்று கூறிய குறவஞ்சி குற்றால மலை வளமும், நாட்டு வளமும், நகர் வளமும் தலட பெருமையும். திரிகூடர்தம் சிறப்பும் எடுத்துரைத்தாள். இது கேட்டு மகிழ்ந்த வசந்தவல்லி.

*''சீர்வளர் குறியின் மார்க்கம் தெரியவே செப்புவாயே''*

என்று வேண்டிட,

*''என்ன குறியாகிலும் நான் சொல்லுவேன் அம்மே-சதுர்*
*ஏறுவேன் எதிர்த்த பேரை வெல்லுவேன் அம்மே!*
*மன்னவர்கள் மெச்சுகுற வஞ்சிநான் அம்மே!''*

(பாடல்-95)

என்று தன் தொழிற்திறன் பற்றிக் குறவஞ்சி வசந்தவல்லியிடம் கூறிக் குறிசொல்லத் தொடங்குகிறாள்.

*சொல்லக் கேளாய் குறிசொல்லக் கேளாய் - அம்மே*
*தோகையர்க் கரசே குறி சொல்லக் கேளாய்*
*முல்லைப் பூங் குழலாளே நன்னகரில் வாழ்முத்து*
*மோகனப் பசுங்கிளியே சொல்லக் கேளாய்''*

(பாடல்-106)

என்று வசந்தவல்லியை விளித்து. ''அவள் மயக்கத்திற்கு காரணம் அவள் பந்தடிக்கும் போது பவனி வந்த பார்த்திபனைக் கண்டு அச்சத்திற் ஏற்பட்ட மயக்கம் போல் தோன்றுகிறது'', என்றாள் குறவஞ்சி, ''நன்று நன்று குறவஞ்சி நாடகக்காரி ஒழுங்காகச் சொல்லி வந்தாய இப்பொழுது குறியை உழப்பிப் போட்டாய் குறியைக் குழப்பிப் போட்டாய் இன்றுவரை மயக்கமும் குளிரும் காய்ச்சலும் எந்த வகையில் ஏற்பட்டது என ஆராய்ந்துப் பார்த்துக் குறிசொல்லடி'' என்றாள் வசந்தவல்லி. ''உன்னுடைய மோகக்கிறுகிறுப்புக்குக் காரணமானவன் பெண் சேர வல்லவன் என்று சொல்லலாம் அம்மே '' என்றாள் குறவஞ்சி ''உனக்கு

தெரிந்த வித்தையின் செருக்கால் என் தலைவனை பெண் சேர வல்லவன் என்று மதியாமல் கூறினாய். வார்த்தை விசேடங்கள் கற்ற வஞ்சிக்கொடியே உண்மையைச் சொல்லடி.'' என்று செல்லமாகக் கண்டித்தாள் ''பெண்களின் அரசியே, பெண் என்றால் திரி என்னும் பொருள் உண்டு ஒரு பெண்ணுடனே 'சேர' என்றால் 'கூட' என்றும் சொல்லலாம் உறுதியாக வல்லவன் என்பதும் நாதன் என்பதும் ஒரே பொருள் தரும். அதனால் அவன் பெயரைத் திரிகூட நாதன்' என்றும் சொல்லலாம் அம்மையே'' என்றவள் நயம்பட நவின்றதை.

*''பெண்ணரசே பெண்ணென்றால் திரியுமொக்கும் - ஒரு*
*பெண்ணுடனே சேரவென்றால் கூடவும் ஒக்கும்*
*திண்ணமாக வல்லவனும் நாதனுமொக்கும் பேரைத்*
*திரிகூட நாதனென்று செப்பலாம் அம்மே!*

(பாடல்-110)

என்ற அழகிய பாடலின் வாயிலாக அறியலாம். வசந்தவல்லி சொல்லியது போல் குறவஞ்சி வார்த்தை விசேடங்கள் கற்றவள் தான் என்பதை நிறுவி விடுகிறாள்.

திரிகூடநாதன் என்ற பெயரைக் கேட்டவுடன் வசந்தவல்லி நாணித் தலை கவிழ்ந்தாள். ''இனிக்கக்கத்தில் இடுக்குவாயோ வெட்கத்தை அம்மே'' என்று வசந்த வல்லியைக் கேலி பேசிய வஞ்சிக்கொடி குறவஞ்சிக்குத்தான் தேடிவைத்திருந்த அணிகலன்கள் அனைத்தையும் பூட்டி மகிழ்வோடு அனுப்பி வைத்தாள் வசந்தவல்லி.

எளியவளாக இன்று கருதப்படும் குறத்தியைக் குறிசொல்லும் தமிழ்க் கலையரசியாக்கி, கற்பொழுக்கத்தால் உயர்ந்தவளாக்கி, காவியத் தலைவியும் ஆக்கியுள்ளார் என்று திரிகூடராசப்பக் கவிராயரைத் தமிழறிஞர்கள் பாராட்டி உரைப்பதற்குக் குறவஞ்சியின் பாத்திரப் படைப்பின் சிறப்பே காரணம் ஆகும் *

''இந்தக் குறவஞ்சிப் பிரபந்தத்திற்கு உண்மையான காவிய நாயகி வசந்த மோகினி அல்ல; இந்தக் குறத்திதான் என்றே சொல்லத் தோன்றுகிறது. இத்தகைய கதாபாத்திரத்தைக் கொண்டு தம் கவிதைக் கண்ணாடியில் குற்றாலத்தை முகம் காட்டி அகத்தின் அழகையும் காட்டச் செய்வதில் திரிகூடராசப்பக் கவிராயர் ஓர் அதிசய வெற்றி பெற்றிருக்கிறார்.''**

---

* தமிழ் இலக்கிய வரலாறு - பேராசிரியர் மு சு.அருள்சாமி ப.277
** திருக்குற்றாலம் - பி.ஸ்ரீ. 73

## குற்றாலக் குறவன் சிங்கன்

சிங்கங்களை ஒத்த வலிமையும், துடிப்பும் மிக்கவனான சிங்கன் குறவஞ்சி நாடகத்தில் அறிமுகம் ஆகின்ற பொழுதே மிடுக்கான புலி, கரடி கிடுகிடுவென நடுநடுங்க வெறித்து நோக்கி, தொக்கான நடை நடந்து சிங்கியைத் தேடிக் கொண்டு வருவதாகக் காட்டப்படுகின்றான்

கொக்கிறகுகளைத் தன் சிகையிலே சூடிக் கொண்டு, புலித் தோலாகிய கச்சையினை இடுப்பிலே அடுக்கடுக்காக வரிந்து கொண்டு தன்னைத் தொடர்ந்த புலியை உறுக்கிப் பார்த்தே அதை ஓடச் செய்துவிட்டுத் தோளிலே அம்பறாத் தூணியைத் தொங்க விட்டுக்கொண்டு தன் கைக்கான ஆயுதங்கள் பலவற்றையும் வளைத்தடியையும் எடுத்துக் கொண்டு, வலையையும் தோளில் போட்டுக் கொண்டு எட்டுத் திசையிலும் அடங்காத ஆற்றலுடையவனாகிய சிங்கன் குற்றால வீதிதனில் வந்து கொண்டிருந்தான். இவை சிங்கனின் தோற்றத்தையும், ஆற்றலையும் காட்டும் வருணனைகளாக அமைந்துள்ளன. இவனை போலவே சரபேந்திரப் பூபாலக் குறவஞ்சியில் வரும் சிங்கன். கையில் ஈட்டி எடுத்துக் கொண்டு காவிச் சல்லடந்தொடுத்துக் கொண்டு, மெய்யினில் வெண்ணீறு பூசிக்கொண்டு மேல்மீசை தன்னை முறுக்கிக் கொண்டு பறவை மேல் விருப்பம் கொண்டு இன்பம் தரும் சிங்கியைத் தேடி வருகின்றான்

பறவை வேட்டையின் போது சிங்கன் நாய் போலத் தடம் பார்த்தும், பூனை போலப் பதுங்கியிருந்தும், நரி போலப் பம்மிக் கொண்டிருந்தும், பேய் போலப் பின் தொடர்ந்து அறைந்து கொன்று வேட்டையாடும் திறனைக் காணலாம்.

> *''ஞாளிபோல் சுவடெடுத்துப் பூனைபோல்*
> *ஓளிபோட்டு நரிபோல் பம்மிக்*
> *கூளிபோல் தொடர்ந்தடிக்கும் திரிகூடச்*
> *சிங்கனெனும் குளுவன் நானே''*

(பாடல்-116)

என்று பெருமிதமாகத் தன்னாற்றலைப் புலப்படுத்துகின்றான் சிங்கன் பறவைகள் வந்து கண்ணியிலே சிக்கும் நேரம் புதிதாக வரும் ஒலி கேட்டு அவை தப்பி ஓடிவிடும் என்பதனால் சத்தம் போடாமல் அமைதியாய் இருந்து பறவைகளைப் பிடிக்க வேண்டும் என்று உடன் வேட்டைக்கு வந்தவர்களிடம் அறிவுரை பகர்வதிலிருந்து அவனது வேட்டைப் பயிற்சியின் தன்மையை நாம் உணர முடியும்.

## சிங்கனின் காதல்

நீண்ட நாட்கள் தன் மனைவி சிங்கியைப் பிரிந்திருந்த சிங்கன் சிங்கியை நினைத்து ஏங்கித் தவிக்கின்றான். 'சிங்கியின் கிள்ளை மொழி கேட்கத்தான் ஒரு கிள்ளையாக இல்லையே' என்ற ஏக்கம் அவனது தவிப்பை காட்டுகிறது. திருக்குற்றாலர் மலைச்சாரலிலே நெற்றிச் சுட்டியை ஒத்த அழகுடன் விளங்கும் சுந்தரியாகிய சிங்கியின்,

*''கொங்கையின் மேல்*
*முட்டிக் கிடந்து கொஞ்சி முத்தாடிக் கூடி நன்றாய்க்*
*கட்டிக் கிடக்க முலைக் கச்சாய்க் கிடந்திலனே''*

(பாடல்-84)

என்று புலம்புகின்ற போது அவனது காதல் நெஞ்சைக் காண முடிகிறது.

சிங்கியின் அங்க அடையாளத்தைச் சொன்னால் அவனைத் தேடித் தருவதாகத் தோழன் நூவன் சொன்னவுடன் சிங்கியின் சிறப்புக்களைச் செப்புகின்றான். கறுமை நிறத்தில் இருப்பினும் அவன் ஒப்பற்ற அழகியாவாள். அவள்

*''கண்க ளிரண்டும் அம்புக் கணைபோல் நீண்டிருக்கும்*
*கையத் தனையகலம் காணுமடா*
*பெண்கள் மயக்குமவள் விரகப்பார்வை சிங்கி*
*பிடித்தால் மதப்பயலும் பெலப்பானோ (கறுப்)*
*நகையும் முகமும் அவள் நாணையக் கைவீச்சும்*
*பகைவருந் திரும்பிப் பார்ப்பாரடா''*

(பாடல்-159)

என்று அவளின் பேரழகுப் பெருவனப்பைப் புலப்படுத்துகின்றான்.

சிங்கியைத் தேடித் தருபவர்களுக்குத் தனக்குத் தெரிந்த அரிய வித்தைகளையும் சிறந்த மருந்துகளையும் தெரிவிப்பதாகச் சொல்லிப் புலம்புகின்றான்

## கூதலும் காதலும்

குற்றால நாதர் தெருவிலே சிங்காரச் சிங்கியை முன் தேடிவைத்துக் காணாமற் போன பொருள் கண்டவர் போல் சிங்கன் கண்டான். காமச் சிங்கியைக் கண்டு காதலென்னும் கடல்பெருகி தரிகொள்ளாமல் கை கலக்கும் போது கரை குறுக்கிட்டாற் போல் வீதி வந்து குறுக்கிட்டதால் வெட்கம் கொண்ட சிங்கிதனை நோக்கி.

*"இங்கே வாராய்! என் கண்ணே! இங்கே வாராய்*
*இங்கே வாராய் மலர்ச்செங்கை தாராய் மோகச்*
*சங்கை பாராய் காமச் சிங்கியாரே (இங்கே)*
*பாதம் நோமே நொந்தால் மனம் பேதமாமே*
*பாத நோக நிற்ப தேது பாவமினிக்*
*கூதலோ கொடிது காதலோ கடினம் (இங்கே வாராய்)"*

(பாடல்-167)

என்று சிங்கியைத் தன் அருகே அழைக்கின்றான். கூதல் என்பது குளிர்காலத்தைக் குறிப்பது. காதற் கணவனும் அன்பு மனைவியும் பிரியாதிருக்கவேண்டிய காலம். காதல் நெஞ்சம்கொண்டோர் கூதல் காலத்தில் பிரிந்திருப்பது கொடுமை என்று கருதிய சிங்கன் காதல் மோகத்தில் திண்டாடினான் அதனை.

*திண்டாடி நின்ற சிங்கன் சீராடும் சிங்கிதனைக்*
*கண்டாடித் துள்ளாடிக் கள்ளாடும் தும்பியைப் போல்*
*கொண்டாடிக் கொண்டாடிக் கூத்தாடிக் கொண்டானே"*

(பாடல்-168)

என்று பாடுகின்றார் திரிகூடராசப்பர்.

சிங்கனும் சிங்கியும் இணைந்து சித்திரா நதியினது கரையிலே கோவில் கொண்டிருப்பவரை, தேனருவித் தடத்தானைச், சித்திர சபையில் நடனம் செய்கின்றவனை, நிலைபெற்ற குற்றாலநாதனை நாங்கள் வாழ்த்துகின்றோம் என்று ஆடிப்பாடி மகிழ்ந்து வணங்கிட நாடகம் இனிதே நிறைவடைகிறது.

குறவஞ்சி நாடகத்தில் வரும் பாட்டுடைத் தலைவி வசந்தவல்லி பேரழகுப் பெட்டகமாகவும் குறவஞ்சி எழிலரசியாகவும், சிறந்த சொல் விளையாட்டியாகவும் படைக்கப்பட்டுள்ளனர். குற்றாலக் குறவன் சிங்கன் வீரமும் வலிமையும் உடைய காதற் தலைவனாகப் படைக்கப் பட்டுள்ளான். குறவனுக்குப் பறவை வேட்டையில் துணையாக வரும் தோழன் நூவன் என்பான் நகைச்சுவை தருகின்றவனாகப் படைக்கப் பட்டுள்ளான். எனவே நாடகத்தில் வரும் கதைமாந்தர் அனைவரும் ஒவ்வொரு வகையில் ஒவ்வொரு நோக்கில் சிறப்பாகப் படைக்கப் பட்டுள்ளனர்.

குற்றாலக் குறவஞ்சியை இசை நாடகமாக நடத்திய திருமதி ருக்குமணி தேவியார் அவர்களின் அடையாறு கலாசேத்ரா நாடகக் குழுவினர் குற்றாலக் குறவன் இடம் பெறும் பிற்பகுதியை விட்டு விட்டுக் குறத்தி இடம்பெறும் முற்பகுதியை மட்டும் இசை நாடகமாக நடத்திக்

காட்டினர். எனவே அவர்களின் குறவஞ்சி நாடகத்தில் வசந்த வல்லி மனம் மகிழக் குறி சொல்லிப் பொன் நகைகளைப் பெற்று புன்னகையோடு குறவஞ்சி திரும்புவதோடு நாடகத்தை முடித்து விடுகின்றனர். இவ்விசை நாடகம் குற்றால நாதர் கோவிலில் நடிக்கப் பெற்றதோடு இந்திய நாடு முழுமையும் நடத்திப் பாராட்டுக்களைக் குவித்ததை எண்ணி மனம் மகிழலாம்.

# 4
# நல்லிசைப் புலமை

## இரட்டுற மொழிதல்

திரிகூடராசப்பக் கவிராயர் தம்முடைய திருக்குற்றால ஊடலின் காப்புச் செய்யுளில் விநாயகரை சிறப்பாகக் குறிப்பிடுகின்றார். தன்னை வழிபடு கின்றவர்களுக்கு ஒரு குற்றமும் விநாயகன் வைக்க மாட்டான் என்ற பொருளில் ''வழுவையான் வழுவையானே'' என்று குறிப்பிடுகிறார். வழுவையான் என்ற சொல்லை இருமுறை பயன்படுத்தி இருவேறு பொருள் தருமாறு அமைக்கும் புலமைத்திறம் பாராட்டத்தக்கது முதல் சொல்லை வழுவை+யான் எனப் பிரித்து யானைமுகத்தவனாகிய விநாயகன் எனப்பொருள் தரும்படி பாடிய புலவர் அடுத்து அதே சொல்லை வழு + வையான் எனப் பிரித்து வழுவாகிய குற்றத்தை வைக்காதவன் எனப் பொருள் தரும்படி பாடுகின்றார். ஒரே சொல்லை இருமுறை பயன்படுத்தி இருவேறு பொருள் தரும்படிப் பாடுகிறார் மனோன்மணீயம் சுந்தரனாரும் இம்முறையைப் பின்பற்றி ''வஞ்சியான் வஞ்சியான்'' என வஞ்சி நகரத்து அரசன் வஞ்சிக்க மாட்டான் எனப் பாடியுள்ளார்.

## சொல்லாட்சி

திருக்குற்றாலக் குறவஞ்சியில் முருகனை வாழ்த்திப் பாடும் போது பன்னிரெண்டு தொடங்கி ஒன்றில் முடியுமாறு இறங்குமுகமாக எண்கள் இடம்பெறுமாறு பாடுகிறார். பன்னிரெண்டு கைகளில் பன்னிரெண்டாவது கை வேல் தாங்கிக் கொண்டிருக்க மற்ற பதினோறு கைகளில் உருத்திரர் பதினொருவருக்கும் உரித்தான தோமரம், கொடி, வாள், குலிசம், பகழி, அங்குசம், மணி, பங்கயம், தண்டம், வில், மழு ஆகிய படைக் கருவிகளைத் தாங்கி இருப்பான். ஆகாயம், பாதாளம் அடங்கிய பத்து திசைகளிலும் உமா தேவியார் திருவடிச் சிலம்பிலிருந்து தோன்றிய நவசக்திகள் வயிற்றில் பிறந்த வீரபாகு முதலிய ஒன்பதிமர் போற்றிப் புகழ்வர். கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலமலை, கந்தமாதனம் ஆகிய எட்டு மலைகளும் ஏழு கடல்களுக்கும் சென்று ஆடிக் களிக்க பொன்போல் ஒளி வீசுகின்ற ஆறு திருமுகங்களும், அஞ்சுதலை

உடையவர்களுக்கு பயம் நீக்கி நான்கு மூன்று ஆகிய பன்னிரெண்டு புயங்களை உடையவளாகியவன் தன் இரு திருவடிகளையும் தரும் ஒருவன் குற்றாலக் குறவஞ்சித் தமிழ்தந்தானே என்று பாடும் எழிலைக் காணலாம்.

*''பன்னிருகை வேல்வாங்கப் பதினொருவர்*
*படைதாங்கப் பத்துத் திக்கும்*
*நன்னவவீ ரரும்புகழ, மலைகள் எட்டும்*
*கடலேழும் நாடிஆடிப்*
*பொன்னின் முடி ஆறேந்தி, அஞ்சுதலை*
*எனக்கொழித்துப் புயநான் மூன்றாய்த்*
*தன்னிருதாள் தரும் ஒருவன் குற்றாலக்*
*குறவஞ்சித் தமிழ்தந் தானே''*

பன்னிரெண்டிலிருந்து ஒன்று வரை உள்ள கீழ் எண்களின் பொருள் முறையே அமைந்திருக்கும் அழகின் நயம் கண்டின்புறத்தக்கதாகும். நான்கு மூன்று பன்னிரெண்டாகும் என்ற கணித முறையையும் கவிராயர் கையாண்டிருக்கும் விதம் நயமானதாகும்.

கவிராயரின் சொற்சிலம்பத்திற்குச் சான்றாக இன்னொரு பாடலையும் எடுத்துக் காட்டலாம். ஒன்றிலிருந்து தொடங்கி ஒன்பது வரை வரிசையாக எண்களைக் குறிப்பிட்டுப் பின்னர் ஒன்பதிலிருந்து கீழெண்களாக எட்டு, ஏழு, ஆறு, ஐந்து, நான்கு, மூன்று, இரண்டு, ஒன்று என்று முடியும் பாடலைத் திரிகூடராசப்பக் கவிராயர் தன் புகழ்பெற்ற தலபுராணத்தில் சிவரகசிய காண்டம், திருமணச் சருக்கத்தில் அழகுற அமைத்துள்ள பாங்கு சிறப்புடையது ஆகும்.

*''ஒருதினம் பொழு திரண்டு முக்காலம் நான்குயர் மறை யைம் பூதம்*
*இருது வாறுட யெழு பெருநதிக் குல மெண்கிரி நவ கண்டம்*
*அருமை யெண்டிசை யெழு தடம்புவன மாறங்க மைம் புல னான்கு*
*கரண முக்குண மிரண்டற ஒரு பெருங் கதிர் மதி விதிமாதோ''*

(பாடல்-19)

ஒரு நாள் பகல் இரவு என இரண்டு பொழுது, இறப்பு நிகழ்வு எதிர்வு எனும் முக்காலம் உயர்ந்த நான்கு மறைகள், ஐந்து பூதங்கள் ஆறு பெரும் பொழுது, ஏழுநதி, எட்டு மலை, ஒன்பது கண்டம், அரிய எட்டுத்திசை, ஏழு புவனம், ஆறு அங்கம். ஐம்புலன், நான்கு அந்தக்கரணம், மூன்று குணம், பசு அறம் பதி அறம் ஆகிய இரண்டு அறமும் சூரிய சந்திரருக்கும்

விதி ஒன்றேயாகும் என்ற கருத்துப் பொருந்திய இப்பாடலில் ஒன்று முதல் ஒன்பது வரை ஏறுமுகமாகவும் அதே ஒன்பதிலிருந்து இறங்குமுகமாக ஒன்றுவரை வருமாறும் அமைத்துப்பாடி இருப்பது கவிராயரின் தனிச் சிறப்பாகும். சரபேந்திர பூபாலக் குறவஞ்சி ஆசிரியரும் தலைவி மன்மதனைப் பழிக்கும் பகுதியில் பத்தொன்பது தமிழ் ஆணடுப் பெயர்களாக வழங்கிய வடமொழிப் பெயர்களை ஒருங்கிணைத்து நிரல் நிரை முறைப்படி பாடியுள்ளார்.*

## சுருங்கச் சொல்லுதல்

சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் திறன் கவிஞர்கட்கு இன்றியமையாப் பண்பு ஆகும் வெற்றெனத் தொடுத்தலைத் தவிர்க்க உதவும் இலக்கியப் பண்பு ஆகும். பாத்திரப் படைப்புகளை - அவர்தம் குணநலன்களை - விளக்கச் சுருக்கமாகச் சொல்லும் முறையிலேயே கவிஞர்கள் வெற்றி கண்டனர். பாத்திரப்படைப்பில் பெரும் வெற்றி கண்டவர் எனப் புகழ்பெற்ற உருசியச் சிறுகதை எழுத்தாளர் ஆண்டன் செகாவ் 'மூன்று ஆண்டுகள்' என்னுந் தன் புதினத்தில் ஒரு கீழ்த்தரமான பாத்திரத்தின் தன்மையை விளக்கும் போது ''அவன் கோயில் விளக்கில் சுருட்டுப் பற்ற வைப்பான்'' என்ற ஒரே வரியில் மிகச் சுருக்கமாக விளக்குவார். இம்முறையிலேயே கவிராயரும் பாத்திரப் படைப்புகளின் புற, அகத் தோற்றங்களைச் சுருக்கமாகக் கூறி விளக்கும் நயத்தைத் திருக்குற்றாலக் குறவஞ்சியில் பரக்கக் காணாலம்.

*''கும்ப முனிக்குச் சிவமான காலம்*
*குதித் தோடிப் போன வைணவர் போலவும்''*

(பாடல்-148)

என வரும் இரண்டடிகளாலே, தல புராணத்தின் கண் சருக்கம் சருக்கமாக வரையப்பட்ட நிகழ்ச்சியை ஆசிரியர் சுருக்கமாக - ஆனால் தெளிவாக - விளக்கியது சுருங்கச் சொல்லும் ஆற்றலைப் புலப்படுத்தும் குறத்தியின் கவின்பெறு வனப்பைக் கூறும் ஆசிரியர். ''கறுப்பில் அழகியடா'' என்றும் ''பகைவரும் திரும்பிப் பார்ப்பாரடா'' என்றும் கூறி விளக்குவார்

## நயம்பட உரைத்தல்

ஆசிரியர் கூறும் பொருளை நயம்பட உரைத்துச் சொல்லும் பகுதிகள் நிறைந்து காணப்படுகின்றன நாட்டுச் சிறப்புப் பற்றிக் கூற வந்த ஆசிரியர், கரும்பு நடுங் காட்சியை நயம்பட உரைக்கும் முறை படித்துச்

*குறவஞ்சி இலக்கியம் - டாக்டர் நிர்மலா மோகன். ப 281

சுவைக்கற்பாலதாகும். ஆண்கள், அழகு கொண்ட இளமங்கையர்களின் சொற்களை இகழ்ந்தது என்று கருதிக் கரும்பினைப் புதைப்பவர்கள் போல் வயல்களில் நட்டுவைக்கின்றனர் அவை மீண்டும் செழிப்புடன் வளர்ந்து மடந்தையின் தோள் அழகையும் தம் பொலிவினாலே வெற்றி கொள்ளும். ஒளியுடைய முத்துகளை ஈன்று, பின்னர் அவர்களுடைய பற்களையும் வெற்றி கொள்ளும் அதன் பின் அவர்களுடைய காதலர்கள் பிரிந்து போன காலத்திலே, பெண்மையை முற்றிலும் வெற்றி கொள்ளக் கருதி, மதனவேளுக்குரிய கரும்பு வில்லாகவும் சிறந்து விளங்கும். அப்படிப்பட்ட கரும்பு வளம் உடையது எங்கள் குற்றாலநாதர்க்குரிய நாடாகும் என்பதை.

*"அந் நவார்மொழி தன்னைப் பழித்ததென்று*
*ஆடவர் மண்ணில் மூடுங் கரும்பு*
*துன்னி மீள வளர்ந்து மடந்தையர்*
*தோளை வென்று சுடர்முத்தம் ஈன்று*
*பின்னும் ஆங்கவர் மூரலை வென்று*
*பிரியுங் காலத்திற் பெண்மையை வெல்லக்*
*கன்னல் வேளுக்கு வில்லாக ஓங்கும்*
*கடவுளாரியநாடெங்கள் நாடே"*

(பாடல்-77)

என்று நயம்பட உரைக்கின்ற பாங்கை அறிந்து இன்புறலாம். இது போன்ற சுவை மிகுந்த பகுதிகள் மிகுதியாக இடம் பெற்று இருக்கின்றன

## ஓசைச் சிறப்பு

திருக்குற்றாலக் குறவஞ்சி போன்ற இசை நாடங்களில் காட்சிகள் நம் கண்ணெதிரேயே நடப்பது போன்ற உணர்வை ஏற்படுத்துபவை அப்பாடல்களில் பயின்று வரும் ஓசைநயமே ஆகும். நிகழ்ச்சிகளுக்கேற்ற காட்சியமைப்புக்களை உயிர்ப்புடனும் உணர்ச்சிடனும் ஓசைநயத்துடன் காட்டுவதில் கம்பனுக்கு நிகரான வெற்றியைப் பெற்றவர் நம் திரிகூடராசப்பக்கவிராயரே ஆவர். காப்பியத் தலைவியர் வசந்தவல்லியும் குறவஞ்சியும் வருகின்ற காட்சிகளை உயிர்ப்புடைய ஓவியமாகத் தீட்டி நம் கண்ணெதிரே உலவ விடுவதற்கு அப்பாடல்களில் அமைந்துள்ள ஓசை நயமே காரணம் ஆகும். வசந்தவல்லியின் வனப்பை.

*"இருண்ட மேகஞ்சுற்றிச் சுருண்டு சுழிஎறியும்*
*கொண்டையாள் - குழை*

*ஏறி யாடி நெஞ்சைச் சூறையாடும் விழிக்*
*கெண்டையாள்*
*திருந்து பூமுருக்கின் அரும்பு போலிருக்கும்*
*இதழினாள் வரிச்*
*சிலையைப் போல் வளைந்து பிறையைப் போல் இலங்கும்*
*நுதலினாள்''*

(பாடல்-11)

என்று வருணிக்கின்ற பொழுது ஓசை நயம்பட உரைப்பதைக் காணலாம் வசந்தவல்லி பந்தடித்துக் கொண்டிருப்பதை

*''மந்திர முலைகள் ஏசலாட*
*மகரக் குழைகள் ஊச லாடச்*
*சுந்திர விழிகள் பூசலாடத்*
*தொங்கத் தொங்கத் தொங்கத் தொம் மெனப்''*

(பாடல்-20)

என ஓசை நயம்படக் காட்டுகின்றார்.

வஞ்சிக்கொடி போன்ற குறவஞ்சியின் எழிலைத் எடுத்தியம்பும் போது,

*வல்லை நிகர்முலை, இல்லை எனும் இடை*
*வில்லை அனநுதல், முல்லை பொரு நகை,*
*வல்லி என, ஒரு கொல்லி மலைதனில்*
*வல்லி அவளினும் மெல்லி இவள் என,*
*ஓல்லி வடகன டில்லி வரைபுகழ்*
*புல்லி வருகுறி சொல்லி, மது ரித*
*நல்லி, பனிமலை வல்லி, குழல் மொழிச்*
*செல்வி புணர்பவர் கல்லி மலைக்குற (வஞ்சி)''*

(பாடல்-64)

வந்தாள் என்று இசை நயம்பட எடுத்தியம்பும் விதம் சிறப்புக்குரியது.

## உவமைச் சிறப்புகள்

கவிதை நன்கு சிறப்புற்று வாழ உதவுவன உவமை. உருவகம் முதலிய அணிகளாகும். இச்சிறப்பு வாய்ந்த உவமைகள் கவிராயரின் நூல்களில் மிகுந்து வரக் காணலாம். தொல்காப்பியனார் இவ்வுவமையை நான்காகப் பிரித்து, வினை, பயன், மெய், உரு என்ற நான்கும் பற்றி உவமை கூறல் உண்டு என்று கூறினார். தொல்காப்பியர் வழி நின்று சில உவமைச் சிறப்புகளைக் காணலாம்.

## வினை உவமை

நாரை கள்ளத் தனமாகத் திரிகின்றது. இது கள்ளரின் கள்ளத்தனமான தொழிலினை ஒத்துள்ளது என்பதை நூலாசிரியர், குற்றாலக் குறவஞ்சியில்

*''ஆசாரக் கள்ளர் போல் நாரை திரியுது''*

என்று வினையொத்திருக்கும் படி வினை உவமையாகக் கூறியிருத்தலைக் காண்கிறோம்.

## பயன் உவமை

வசந்தவல்லியின் வடிவழகை வருணிக்க வந்த ஆசிரியர் அவளது சொல்லின் பயன் இன்னதெனக் காட்டுவதற்கு,

*''கரும்பு போலினித்து மருந்து போல் வடித்த*
*சொல்லினாள்''*

என்று காட்டுகிறார். திருக்குற்றால மாலையிலும், ஆசிரியர், இறைவனிடம் இறைஞ்சுகின்ற பொழுது, ''மழை முகம் தேடும் பயிர் முகம் போல'' என்று பயன் உவமை தோன்றக் கூறுவதைக் கண்டின்புறலாம்.

## மெய் உவமை

குற்றாலத்துச் சிங்கன் ஈட்டியைத் தாங்கி வருகின்றான், அந்த ஈட்டியின் தன்மையைக் கூறவந்த ஆசிரியர், ''மடவார்கண் போல் ஈட்டி கொண்டு'' என்று மெய்யுவமை தோன்றக் கூறுவதைக் காண்கிறோம். திருக்குற்றால மாலையில் நிலையற்ற உலகியல் வாழ்வை விளக்கவந்த ஆசிரியர், ''ஆற்றில் குமிழியின் தோற்றம் போல்'' என்று மெய்யுவமை பயின்று வரக் காட்டியிருத்தலையுங் காண்கிறோம்.

## உருவ உவமை

வசந்த வல்லியின் கவின்பெறு வனப்பை வருணிக்க வந்த கவிராயர் உவமித்துச் சொல்லும் சிறப்பு கண்டின்புறத்தக்கது.

''திருந்து பூ முருக்கின் அரும்பு போலிருக்கும் இதழினாள்'' என்று வசந்த வல்லியின் இதழின் வண்ணத்தைக் குறிப்பிட்ட ஆசிரியர் குறவஞ்சியின் இதழினைக் குறிப்பிடும் போது 'இலவுக்கும் சிவந்த வாய்'' என்றுரைக்கக் காணலாம். திருக்குற்றால உலாவில் பேதைப் பெண்ணின் கூந்தலை ''இருள் போலும் குழலினாள்'' என்று கூறி விளக்குவது பாராட்டுக்குரியதாகும்.

## உயர்வு நவிற்சியணி

ஒரு பொருளை அதன் இயல்பான தன்மையினின்றும் மிகுதியாக உயர்த்திக் கூறுவது உயர்வு நவிற்சி யணியாகும். உலக வாழ்வில் நாம் காண இயலாத காட்சிகளைக் சுவைபடச் சொல்லும் சொல்லோவியமே இந்த அணியாகும்.

குற்றாலக் குறவஞ்சியில் தன் மலை வளத்தைக் கூற வந்த குறவஞ்சி திரிகூட மலையின் சிறப்பினை எடுத்துரைக்கிறாள். ஆண் குரங்குகள் பல வகையான பழங்களை பறித்துக் கொண்டு வந்து கொடுத்து தம் மந்திகளோடு கொஞ்சிக் கொண்டிருக்கும். அப்போது அம்மந்திகள் கீழே சிந்துகினற கனிகளுக்காக எதிர்பார்த்து தேவலோகத்தில் உள்ளவர்களும் கெஞ்சிக் கொண்டிருப்பார்கள். காட்டில் வாழும் வேடுவர்கள் தம் கண்களால் உறுத்து நோக்கி வானவர்களை கீழே வருமாறு அழைத்துக் கொண்டிருப்பார்கள். வானிலே இயங்கும் சித்தர்கள் பலரும் அடிக்கடி வந்து காயசித்தி மூலிகைகளை வளர்த்துக் கொண்டிருப்பார்கள். தேனருவியின் அலைகள் மேலே எழும்பிச் சென்று வானின் வழியாக ஒழுகிக் கொண்டிருக்க, அதனால் செங்கதிரோனின் தேர்க் குதிரைகளின் கால்களும் தேர்ச் சக்கரங்களும் வழுக்கி விழவும் நேரும். வளைந்த இளம் பிறையினைத்தம் சடையிலே முடிந்திருக்கும் அழகினையுடையவரான குற்றாலநாதரின் அத்தகைய வளமுடைய திரிகூடமலை தான் எங்களுடைய மலையுமாகும். என்று தம்முடைய மலையின் சிறப்பைக் குற்றாலக் குறவஞ்சி கூறுவதைக் காணலாம்.

*''வானரங்கள் கனிகொடுத்து மந்தியோடு கொஞ்சும்*
*மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்*
*கானவர்கள் விழியெறிந்து வானவரை அழைப்பார்*
*கமனசித்தர் வந்து வந்து காயசித்தி விளைப்பார்*
*தேனருவித் திரைஎழும்பி வானின் வழி ஒழுகும்*
*செங்கதிரோன் பரிக்காலும் தேர்க்காலும் வழுகும்*
*கூனலிளம் பிறைமுடித்த வேணியலங் காரர்*
*குற்றாலத் திரிகூட மலை எங்கள் மலையே''*

(பாடல்-54:1)

## ஐயவணி

தண்டியலங்காரம் உவமையணியின் வகைகளுள் ஒன்றாக ஐயவணியைக் குறிப்பிடுகிறது. ஐயவுவமை என்பது உவமையையும், பொருளையும் ஐயுற்று உரைப்பது என்பர். பாட்டுடைத் தலைவி வசந்தவல்லி பந்தடிக்கும் பாவனையைக் கண்டவர்கள்; இவள்

திருமகளோ, ரதியோ, தேவலோக அரம்பையோ என்று ஐயம் கொள்கின்றனராம், இவள் மனந்தான் முன் செல்கின்றதா? இவள் கண்கள் தாம் முந்துகின்றனவா? இவள் கைகள் தாம் முந்துகின்றனவா? என்று தமக்குள் எண்ணிக் கொள்கின்றனராம்.

*"இந்திரை யோவிவள் சுந்தரி யோதெய்வ ரம்பையோ*
*மோகினியோ மனம்*
*முந்திய தோவிழி முந்திய தோகர முந்திய தோவெனவே"*

(பாடல்-12)

என வரும் அடிகளில் ஐயவணி சிறப்பாக அமைந்துள்ளது.

## சொற்பின் வரு நிலையணி

ஒரு சொல் பல்வேறு பொருளில் தொடர்ந்து வருதல் சொற்பின் வருநிலையணி எனப்படும். குற்றாலக் குறவஞ்சியின் பாட்டுடைத் தலைவி வசந்தவல்லி தோழியிடம் தன் வருத்தத்தைப் புலப்படுத்தும் பகுதியில் கொழுந்து என்னும் சொல் நான்கு இடங்களில் அமைந்திருக்கக் காணலாம்.

*"கங்கைக் கொழுந்தணி தெய்வக் கொழுந்தை நான் கண்டு குளிர்*
*திங்கட் கொழுந்தையும் தீக்கொழுந் தாக்கிக் கொண்டேனே"*

(பாடம்-39)

இப்பாடலில் முதல் வரியிலுள்ள கங்கை கொழுந்து என்பதற்கு கங்கையாகியப் பெண் என்றும், அடுத்து வரும் தெய்வக் கொழுந்து என்பதற்கு தெய்வங்களில் சிறந்த என்ற பொருளும். இரண்டாவது வரியில் குளிர் திங்கட் கொழுந்து குளிர்ச்சியைத் தரும் மூன்றாம்பிறை நிலவு என்றும் அடுத்து வரும் தீக்கொழுந்து என்ற சொல் வெப்பத்தைத் தரும் தீச்சுடர் என்ற பொருளிலும் வந்து நயம் தருதலைக் காணலாம் இப்பாடல் வரிகளில் சொற்பின் வருநிலையணி சிறப்பாக அமைந்துள்ளது என்பதை அறியலாம்

## முரண் அணி

ஒன்றற் கொன்று முரணாகத் தோன்றுவனவற்றைக் எடுத்துக்காட்டி நயம்பட உரைத்தல் முரணணி ஆகும்.

*"அஞ்சு தலைக்குள் ஆறு தலைவைத்தார் எனது மனதில்*
*அஞ்சு தலைக்கொ ராறு தலைவையார்*
*நஞ்சு பருகி அமுதங் கொடுத்தவர் எனது வாள்விழி*
*நஞ்சு பருகி அமுதங் கொடுக்கிலார்"*

(பாடல்-48)

என்று வசந்தவல்லி புலம்பும் இப்பாடல் வரிகளில் அஞ்சு-ஆறு, வைத்தவர்-வையார் நஞ்சு-அமுதம், கொடுத்தவர்-கொடுக்கிலார் என்பது முரண் சொற்கள் அமைந்து பொருள் நயம் தருவதைக் காணலாம்.

*"மேக்கெழுந்த மதிசூடிக் கிழக்கெழுந்த*
*ஞாயிறுபோல் மேவினாரே"*

(குறவஞ்சிப் பாடல்-3)

என்று பாட்டுடைத் தலைவரைச் சிறப்பிக்கும் பகுதிகளில் மேற்கு-கிழக்கு, மதி-ஞாயிறு என்று முரண் சொற்கள் வந்து சிறப்பிக்கின்றன.

---

# 5
# சைவமும் தமிழும்

இறைவன் தமிழ்ப் பாடல்களால் தன்னைப் போற்றிப் பாடிய தமிழ்ப் பாவலன் சுந்தரமூர்த்தி நாயனாருக்காகப் பரவை நாச்சியாரிடம் காதல் தூது சென்றதைப் பெரிய புராணத்தால் அறியலாம். தடுத்தாட்கொண்ட புராணத்தில் இறைவனை எப்படி வழிபடுவது என்ற சுந்தரமூர்த்தியிடம்

*''அர்ச்சனை பாட்டேயாகும்*
*ஆதலால் மண் மேல் நம்மைச்*
*சொற்றமிழ் பாடுக''*

என்று சுந்தரமூர்த்திக்கு இறைவன் கட்டளையிட்டார் என்பார் சேக்கிழார் சுவாமிகள். நம் திரிகூடராசப்பக் கவிராயர் காலத்தில் வடுகர் ஆட்சி நடைபெற்றதால் தமிழ்ப் புலவர்களையும், தமிழையும் ஆதரிப்பார் இல்லை என்பதை ''பொதுவாக மதுரை நாயக்கர்கள் தண்டமிழ் மொழியை ஆதரிக்கவில்லை'' என்று பேராசிரியர் அ.கி. பரந்தாமனார் அவர்கள் கூறுவதால் அறியலாம். விஜயரங்க சொக்கநாத நாயக்கர் மட்டும் குற்றாலக் குறவஞ்சியை இயற்றிய திரிகூடராசப்பக்கவிராயரை ஆதரித்ததை உளங் கொண்டே பேராசிரியர் அ கி.பரந்தாமனாரும் ''மதுரை நாட்டை ஆட்சி செய்த நாயக்க மன்னர்கள் பதின்மூவருள் தமிழ்ப் புலவரை ஆதரித்து நிலம் வழங்கியவர் விஜயரங்க சொக்கநாதர் ஒருவரே போலும்'' என்று குறிப்பிடுகிறார்.

இத்தகு சூழ்நிலையில் தமிழ்மொழி மீது தமக்குள்ள அன்பின் காரணமாகத் திரிகூடராசப்பக் கவிராயர் தம் படைப்புகள் அனைத்திலும் தமிழ் உணர்வைப் புலப்படுத்தியுள்ளார். திரிகூடராசப்பக் கவிராயர் குறவஞ்சியைத் தொடங்கும் முதற் பாடலிலேயே.

*''பூமலி இதழிமாலை புனை குற்றாலத்தீசர்*
*கோமலர்ப் பாதம் போற்றிக் குறவஞ்சித் தமிழைப் பாட''*

என்று குற்றாலத் தீசராகிய திரிகூடநாதரின் திருவடிகளைப் போற்றி குறவஞ்சியாகிய நாடகத் தமிழைத் தொடங்க இறைவன் அருள் புரிய வேண்டும் என்று வேண்டுகின்றார். முருகனைப் போற்றும் அடுத்த பாடலிலும்

*"தன்னிரு தாள் தரும் ஒருவன்*
*குற்றாலக் குறவஞ்சித் தமிழ் தந்தானே"*

என்று பாடுகிறார்.

முத்தராகிய சிவபெருமானின் திருமேனி முழுவதுமே உருகுமாறு முன்னாளிலே தமிழ் உரைத்தவர் அகத்திய முனிவர் என்ற குறிப்பு

*"முத்தர் திரு மேனியெல்லாம் உருகவே தமிழுரைத்த*
*முனியைப் பாடி"*

என்ற பாடல் வரிகளால் வெளிப்படுகிறது.

குற்றாலநாதர் புகழ் பாடும் குற்றாலக் குறவஞ்சியாகிய பாமாலையை "சீரிய தமிழ்மாலை" என்று குறிப்பிடுவது கவிராயரின் தமிழ்ப்பற்றைக் காட்டுகிறது. தமிழ்ப்புலவர் கூட்டங்களில் எல்லாம் செந்தமிழாகிய தேனாறு வழிகின்ற பாட்டுகளையுடையவர் திரிகூடநாதர் என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

*"....நீள்வேழத்*
*தந்திவழி பாட்டினார் சங்கமெலாஞ் செந்தமிழ்த்தேன*
*உந்திவழி பாட்டினா ரூர்*

(சிலேடை வெண்பா-41)

என்ற பாடல் வரிகளால் ஆசிரியரின் தமிழ்ப்பற்றினை அறியலாம்.:

குற்றாலத்து வீடுகளில் உள்ள மாடங்களில் உள்ள கிளிகள் மிகுந்த அளவில் தமிழ் பேசும் என்பதை,

*"மாடக்கிளியும் வருவிருந்து பார்ப்பவரும்*
*கூடத்தமிழ் தீட்டுங் குற்றாலம்"*

(சிலேடை வெண்பா-65)

என்ற திருக்குற்றாலச் சிலேடை வெண்பா பாடலால் அறியலாம்.

குற்றாலத்தில் நடைபெறும் முத்தமிழ்ப் பாடல்களின் ஆய்வு, கூடல் மாநகரமாம் மதுரையில் நடைபெற்ற தமிழ்ச் சங்கப் புலவர் கூட்டத்தை ஒக்கும் என்ற கருத்து.

*"பாடலார் முத்தமிழ்க்கும் பார்த்திபர் பால் வெம்போர்க்கும்*
*கூடலார் சங்க மெய்க்குங் குற்றாலம்"*

(சிலேடை வெண்பா பாடல்-53)

என்ற பாடலில் காணப்படுகிறது.

விஜயநகரப் பேரரசு தென்னாட்டிலே இந்துப் பேரரசாக நாட்டப்பட்ட காலப் பகுதியிலே அரசவைகளிலே கன்னடமும் தெலுங்கும் சிறப்பிடம் வகித்தன. தமிழ் நாட்டிலே "மூவேந்தருமற்று முடியற்றுச் சங்கமற்றுப் பாவேந்தர் காற்றில் இலவம் பஞ்சாகப் பறந்த'' காலத்திலே குடைநிழலிருந்து குஞ்சரம் ஊர்ந்தோர் நடைமெலிந்தனர், உயர் கலைஞர் அரசறிய வீற்றிருந்த வாழ்வு வீழ்ந்தது

திரிகூடராசப்பக் கவிராயர் தம் காலச் சூழ்நிலையைக் கருத்திற் கொண்டு சிவபெருமானிடம் தனக்கென்று வேண்டுதல் எதுவும் செய்யாமல், தமிழ் மொழிக்காகவும் தமிழ் மக்களின் சைவ சமயத்திற்காகவும் வேண்டுதல் செய்வதை அறியலாம். தமிழ் ஆட்சி மொழி எனும் சிறப்பிழந்து தாழ்த்தப்பட்டு வந்ததை உணர்ந்த திரிகூடராசப்பக் கவிராயர் தமிழரின் பிறமொழிக் காதலால் தமிழ் மொழிக்கு நேரவிருக்கும் கேட்டை உணர்கிறார். பிற சமயத்தவரான முகமதியர் படையெடுப்புகளினாலும், கிறித்தவர்களின் வருகையினாலும் தமிழ்ச் சைவ சமயத் தோற்றமும் மறைந்து போகக் கூடும் என்று அஞ்சுகிறார். தமிழின் தூயதன்மை பிறமொழிக் கலப்பால் சிதைந்து போகுமோ என்று சிந்தை கலங்குகிறார். எனவே சிவபெருமானை நோக்கி தமிழையும் சைவத்தையும் காக்க வேண்டுமென வேண்டுகிறார்.

*"கடம்ப வனத்தகழைவனத் தாய்கமழ் மாமலையக்*
*கடம்ப வனச்சண்ப காடவி யாய்கவி வாணர்தொண்டர்*
*கடம்ப வனத்தமி ழுஞ்சைவ வேடமும் காப்பது நின்*
*கடம்ப வனத்தர் பரவுங்குற் றாலக்கங் காதரனே'*

(யமக அந்தாதி, பாடல் எண் 95).

சூரபத்மனால் தேவேந்திரன் ஆட்சிக்குட்பட்ட இந்திரலோகம் முழுவதும் அழிக்கப்பட்டபோது, அழியாது நிலைபெறும் நாடு செந்தமிழ் வழங்கும் பாண்டியநாடு என்று கருதி இந்திரன் வானை அளாவும் உச்சிகளையுடைய திரிகூடத்தைப் புகலாக அடைந்தான் என்பதை,

*"...முழுதினும் அழியாத*
*கன்னி நாடு செந்தமிழ் நாடெனக் கருதிய*
*வானவர் கோமான்''*

என்று ஆசிரியர் திரிகூடராசப்பக் கவிராயர் குறிப்பிடுகிறார்.

முத்தியாகிய நிலத்தே உள்ள கரும்பைப் போன்றவர் முத்தமிழ்த் தேனாக வந்து என் அறிவின் கண் தோன்றியவர் சிவபெருமான் என்று

---

* சமூகவியலும் இலக்கியமும் பக் 140

சிவபெருமானையே தமிழாகக் காண்கிறார், ஆசிரியர்.

*"முத்திக் கரும்பினார் முத்தமிழ்த்தே னர்கவந்தென்*
*உத்திக் கரும்பினர் ரூர்"*

(பாடல் என் 16)

என்ற அடிகளால் சிவபெருமானைத் தமிழாகக் காண்பதை உணரலாம்.

## கல்வி மொழி

பயிற்று மொழியாது என்ற இக்காலத்தில் எழுந்துள்ள கேள்விக்கு விடையாகப் பதினெட்டாம் நூற்றாண்டிலேயே தமிழ் நாட்டில் தமிழ் தான் கல்விக்குரிய மொழி என்பதைத் திரிகூடராசப்பக் கவிராயர்.

*"கலவித் தமிழுக்குரியார் திரிகூடக்கர்த்தர் பொற்றாள்"*

என்று கூறுகிறார்

## தமிழே வழிபாட்டு மொழி

கோயில்களில் வழிபாட்டு மொழி தமிழாக இருக்க வேண்டுமென்பதே சிவபெருமான் விருப்பம் என்பதனையும், தமிழ் வழிபாட்டுக்காகத் தான் தென்னாட்டிற்கு அகத்தியரை சிவபெருமான் அனுப்பினார் என்பதனையும்,

*"....மேலான*
*சீதத்தமிழாற் சிவாகமப் பூசை செய்யப்*
*போந்த தமிழ்முனி நீ போதுகென"*

(உலா 54 - 56)

திரிகூடராசப்பர் குறிப்பிடுகின்றார் தமிழ், தமிழ் வழிபாடு ஆகியன பற்றிய கருத்தாக்கங்களின் வளர்ச்சிக்கு வித்திட்டவர்களில் திரிகூடராசப்பக் கவிராயர் குறிப்பிடத்தக்கவர் எனலாம்

## பக்திச் சுவை

திரிகூடராசப்பக்கவிராயர் சைவத்தின் மீது மிகுந்த பற்றுக் கொண்டு பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடியுள்ளமையை அவர் சிற்றிலக்கியங்கள் புலப்படுத்துகின்றன. சைவ நன்னெறியையும், இறைவன் உண்மையையும் இக்கொள்கைக்காக வாழ்ந்த சைவச் சான்றோர்களையும் காட்டும், பக்தி நூலாகவே திரிகூடராசப்பக் கவிராயின் சிற்றிலக்கியங்கள் அமைந்துள்ளன. இதற்குத் தக்க சான்றாகத்

திருக்குற்றாலத் தலப்புராணத்தில் தேவர்கள் சிவத்துரோகந் தீர்ந்த சருக்கப் பாடலைக் காட்டலாம்.

*"ஈயறியாப் பூந்தேனே யெழுத்தறியா மறைப்பொருளே*
*காயறியாச் செழுங்கனியே கற்பகத்தின் பசுங்கொழுந்தே*
*தாயறியாக் கருவிலிருந் தமுதூட்டும் தாய்த்துணையே*
*நீயறியாச் செயலுண்டோ நிகலபரம் பரமூர்த்தி"*

(பாடல்-36)

ஒரு சமுதாயம் எவ்வகை இலக்கியத்தை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறதோ அவ்வகை இலக்கியம் தான் அக்காலத்தில் உண்டாவது இயல்பு. காலத்துக்கேற்ப உலகியல் மக்களின் நிலைக்கேற்ப கீழிறங்கி வந்து அவர்கட்கு ஏற்ற சுவையும் கொடுத்துப் பின் ஆன்மாவைப் பக்குவப்படுத்த வேண்டும் என்ற நடைமுறையையே பதினெட்டாம் நூற்றாண்டுக்கேற்ப திரிகூடராசப்பக் கவிராயர் பாடினார் என்ற கருத்தே ஏற்புடையதாகும். திரிகூடராசப்பக் கவியார் எப்பொருளில் எவ்வகைப் பாடல்களைப் பாடினும், சிவமணம் கமழக் காண்கிறோம். திருநீற்றின் பெருமையை உரைக்கப் போந்த திருஞானம்பந்தர்,

*"முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு*
*சத்தியமாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு"*

என இயம்பினார். அவ்வாறாயின் திருநீற்றுப் பெருமையை உணராதார் நீறணியாதார், 'தக்கோர்' அல்லர் என்பதும் அவர் தகவிலார் என்பதும் பெறப்படும். சைவ மரபிற்றோய்ந்த நம் கவிராயர் அவர்களும் நீறணியாத தகவிலாருக்குத் தான் படைத்த குறவன் மூலம் தண்டனை தர எண்ணுவதையும் காணலாம்.

*"காதலஞ் செழுத்தார் போத நீறணியார்*
*கைந் நரம் பெடுத்துக் கின்னரந் தொடுத் தப்*
*பாதகர் தோலாற் பலதவில் அடித்துப்*
*பறவைகள் படுக்குங் குளுவனும் நானே"*

சிவபெருமானின் அருளைத் தருகின்ற திருநீற்றினை அணியாதவர் களுடைய கைகளின் நரம்பினை வெட்டி எடுத்துக் கின்னரம் என்னும் யாழிலே நரம்பாகத் தொடுத்துக் கொண்டு அந்தப் பாதகர்களின் தோலினால் பலவகைத் தவில்களைச் செய்து அவற்றை அடித்துக் கொண்டே பறவைகள் பிடிக்கும் குளுவனும் நானே என்று தன்னைத் தானே அறிமுகப்படுத்திக் கொள்ளும் குறவனின் சைவப்பற்று திரிகூடராசப்பரின் சைவப்பற்றைப் புலப்படுத்துகிறது

பாடல் அமைப்பு முறையும், இறைவனை வாழ்த்தும் முறையும் சைவ இலக்கிய நோக்கில் கருத்துகளை வலியுறுத்துவதும் தேவார முறைகளைப் பின்பற்றியே அமைந்திருக்கின்றன. திருக்குற்றாலத் தலபுராணத்தில்,

*''தென்புலக் குறைவு நீங்கச் சிவமென நிறைந்தாய் போற்றி*
*முன்பிலா நடுவுமில்லா முடிவிலாப் பிரமமான*
*இன்பமே திருக்குற்றாலத் திறைவனே போற்றி போற்றி''*

என்று கவிராயர் பாடுவது திருவாசகத்தின் போற்றித் திருஅகவலை நினைவுப்படுத்துகிறது. மாலும் அயனும் காண இயலாத மாதொரு பாகனுக்குப் பிறப்பும் இல்லை; இறப்பும் இல்லை என்பது சைவக் கருத்து ஆகும். 'தென்னாடுடைய சிவன்' இன்பத்தின் உரு என்பதை திரிகூடராசப்பக் கவிராயர் தன் பாடலில் 'இன்பமே' எனப் போற்றி வாழ்த்துவதால் அறியலாம்.

உயிர்களின் வினையாற்றல் அருள் பெறுவதற்காகவே நிகழ்கின்றது. சைவ சமயக் குரவர்களின் நாட்டம் எல்லாம் அருள் நாட்டமாகவே இருந்து வந்திருக்கின்றது. இறைவனைக் குருந்த மரத்தடியில் மனித உருவிலேயே குருவாகக் கண்டு கழிபேருவகை எய்திய மணிவாசகப் பெருந்தகையும் ''தன் நெஞ்சும் பொய் தன் அன்பும் பொய்'' என்று உலகின் மாசையெல்லாம் தன்மேலேற்றிப் பாடுவார். ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர்களின் இயல்பு இது.

*''பேராசைக் கள்ளத்தை யுள்ளேயடக்கிப் பிறருக்கெல்லாம்*
*பாராசையற்றவர் போற்றிரிவேன் பசுத் தோல் புனைந்து*
*போராசை கொண்ட புலி நானென்னாசையைப் போக்குகண்டாய்*
*ஓராசையுமற்ற யோகீ குற்றாலத்துறை பவனே''*

(திருக்குற்றால மாலை- 61)

ஓராசையும் மற்ற யோகீயாகிய குற்றாலத்துறைபவனே என் உள்ளத்திலுள்ள பேராசையைக் கள்ளத் தனமாக மறைத்து உள்ளே அடக்கிக் கொண்டு உலகப் பற்று இல்லாதவர் போல் திரிவேன். பசுத்தோலைப் போர்த்திக் கொண்ட பேராசை மிக்க புலியாகிய என்னுடைய ஆசையின் தன்மையை நீ உணர மாட்டாயா? என்று இறைவனிடம் கவிராயர் கெஞ்சுவதை நாம் உணரலாம். கபட வேடதாரிகளைச் சாட வந்த ஆசிரியர் தம் மீது தாமே குற்றத்தைச் சுமத்திக் கொள்கிறார்.

தொன்றுதொட்டு வந்த பக்தி இலக்கியங்கள் அனைத்தும் உளத்தூய்மைப் பற்றியே வலியுறுத்துகின்றன. வள்ளுவமும் 'மனத்துக்கண் மாசிலன் ஆதல்' என்றது. ''ஆசையை அறுமின்'' என்றார் திருமூலரும். மணிவாசகர் போன்ற சமயக் குரவர்கள் உலகியற் கட்டுகளைக் களைந்தெறிந்தவர்கள் தாம் என்றாலும் உலகியற் கட்டுகளில் உழலும் நம்மனோர்க்கு அறிவுறுத்துவதற்கு உலகின் குற்றங்களை எல்லாம் தன் மீதேற்றிக் கூறி அறிவுறுத்துவர். அம்மரபே கவிராயராலும் பேணப்பட்டு அவர் படைப்புக்கள் எல்லாம் அறவுரை கூறுவனவாகவே காணப்படுகின்றன என்பதைப்,

*''பொன்னென்று சொன்னவுடனே மயக்குமென் புத்தியைநான்*
*என்னென்று சொல்லித் திருத்திக் கொள்வேன்...''*

(மாலை-27)

*''ஆசையெல்லாம் பொருண்மேலா யொரு வனகத்திலிரா*
*வேசையு மென் னெஞ்சு மொக்குங் கண்டாய்....''*

(மாலை-9)

என வரும் தொடர்கள் கவிராயரின் அறம் சார்ந்த பக்திச் சிறப்பைப் புலப்படுத்துகின்றன. ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும் சால்பு படைத்த மனம் வேண்டும் என்னும் அறவுரை பெரிய புராணம் காட்டும் அருளுரையாகும். அவ்வழி நின்றே கவிராயரின் பண்பட்ட பனுவலும் பொன்னுக்கு மனம் மயங்குதல் ஆகாது என்று கூறுவதைக் காணலாம்

சைவ நன்னெறியில் தோய்ந்த கவிராயர் அவர்களும் மணிவாசகரைப் போலவே இறைவனைத் தியானித்திருக்க நெஞ்சில் உறைப்பிலையே என்று இறைஞ்சுகின்றார்.

*''மறைப் பொருளான நின் சேவடி வாழ்த்திவட வருவித்*
*துறைப் புனலாடிக் குழல்வாய் மொழியுடன் சோதியுன்னை*
*யிறைப் பொழுதாகிலுமுள்ளே தியானித்திருக்க நெஞ்சில்*
*உறைப்பிலையே யென்ன செய்வேன் குற்றாலத்துறைபவனே''*

(பாடல்-74)

என்று பாடுகின்றார். இவ்வாறு சைவ சமயப் புலமையிற் சிறந்த புலவர் பெருமான் தன் நூலில் சைவ நன்னெறியும், ஒழுகலாறுகளும் வருமாறு பாடியிருந்தலை உணர்ந்து இன்புறலாம்.

புலித்தோல் உடுத்தும் இயல்பினராகிய குற்றாலத்துறையும் ஈசர் சுந்தரமூர்த்தி நாயனாரின் திருமணத்தைத் தடுத்தாட்கொண்ட நிகழ்ச்சியையும், பின்னர் அவரே சுந்தர மூர்த்தியின் திருமணத்தைத்

நிறைவேற்றிட வேண்டி பரவை நாச்சியாரிடம் தூது சென்று திருமணத்தை நடத்திக் கொடுத்த நிகழ்ச்சியையும் நினைவு கூர்வது போல் அமைந்துள்ள இப்பாடலில் இறைவன் திருவிளையாடல்களுக்காக எடுக்கும் வடிவங்களை யாரறிய முடியும் என்று கேட்கிறார் திரிகூடராசப்பக் கவிராயர்.

*"தடுக்கும் பொழுதிலணுவளவேனுந்தடுத்துக் கொள்வாய்*
*கொடுக்கும் பொழுதிவெல்லாங்கொடுப்பாய்திருக்கூத்துக்கு நீ*
*எடுக்குஞ்சொருபங்களாரறிவாரெனையான் புலித்தோல்*
*உடுக்குஞ்சதானந்த யோகீ குற்றாலத்துறைபவனே"*

(மாலை.பாடல்-97)

குற்றாலத்துறைபவராகிய இறைவனே வெற்றி கொள்ள இயலாத போர்க்களங்களில் வெற்றியைப் பெறுபவராயினும் கொடிய வினையைத் தம்முடைய அறிவால் வெல்லக் கூடியவர் யாரும் இல்லை. நின்கருணை இல்லையென்றால் நல்லறிவுடன் நல்வாழ்வு வாழ்ந்தவரும் பொருட் செல்வமிழந்து இரந்துண்ண நேரிடும். உன்னுடைய அருள்பெற்றவர்கள் ஒன்றும் தெரியாதவர்களாய் இருப்பினும் தகுதியில்லா விட்டாலும் இந்த உலகை ஆட்சி புரியும் மேன்மையை அடைவர் என்பதை.

*"வென்றறியாச்சமர் வெல்பவராகிலும் வெவ்வினையைச்*
*சென்றறிலால் வெல்லவல்லவருண்டோநின செயல் பிரிந்தால்*
*நன்றறிவாருமிரப்பாருன தருணாட்டம் பெற்றால்*
*ஒன்றறியாருலகாள்வார் குற்றாலத்துறைபவனே"*

(மாலை பாடல்-35)

என்ற பாடலால் அறியலாம்.

குற்றாலத்துறை குறும்பலாநாதரே, உன்னைப் பிரிந்தால் அரை நொடிப்பொழுதும் எனக்கு ஒரு கோடி கோடியுகம் போன்றதாகும் இறைவனே என்று ஆசிரியர் முறையிடுவதை,

*"உன்னைப் பிரிந்தால் அரைநொடிப் போதுமெனக்*
*கொரு கோடி கோடியுகங்காண் குற்றாலத்துறைபவனே"*

(மாலை பாடல்-68)

என்று குற்றால நாதரை பிரிவதால் ஏற்படும் துயரத்தின் நிலையைக் குறிக்கின்றார்.

குற்றாலத்தில் எழுந்தருளியிருக்கின்ற கூத்தன் என்னும் பெருமானைத் தரிசிக்கவும் துதிக்கவும் அளவில்லாத கண்களையும்,

நாவுகளையும் ஐயோ பிரமன் படைத்தானிலையே என்று திரிகூடராசப்பக் கவிராயர் ஏங்கித் தவிப்பதை

*"....நன்னகர்க் கூத்தனைச் சேவைதுதி*
*செய்ய வனந்தம் விழிநாவந் தோவயன் செய்திலனே"*

(பாடல் எண்-35)

எனும் திருக்குற்றால யமகஅந்தாதி பாடலால் அறியலாம்.

## பசிக்கொடுமை

இறைவனை நோக்கி முறையிடும் திரிகூட ராசப்பர் காமம் போன்றவற்றைத் தன்னால் பல நாட்கள் அடக்கிப் பொறுத்திருக்க முடிந்தாலும் ஒரு நாள் கூட பசியை அடக்க முடியவில்லையே; இதை யாரிடம் முறையிடுவேன் என்று புலம்புவதைப்

*"பன்னாளுங் காமம் பொறுத்திருந்தாலும் பசி யொருநாள்*
*என்னாற் பொறுக்கப் படாது கண்டாய் இதை யார்க்குரைப்பேன்"*

(திருக்குற்றால மாலை பாடல்-41)

என்ற பாடலால் மனிதநிலையைப் வெளிப்படுத்துவது புதுமை யானதாகும்.

கவிராயரின் நூல்களில் சிற்றின்ப உணர்வூட்டும் பகுதிகள் காலத்தின் தடங்களாகக் காணப் பெற்றாலும் சைவத்தொன்னெறி மரபைப் போற்றிட ஆசிரியர் மறக்கவில்லை. தேவார திருவாசக அன்பர்கள் பக்தி உணர்வுடன் திருக்குற்றால மாலை, திருக்குற்றாலப் பரம்பொருள் மாலை. குழல்வாய்மொழி கலிப்பா மாலை, குழல்வாய் மொழி கோமள மாலை. போன்ற பாமாலைகளைப் பாடி வணங்கியிருப்பர்.

புராண விரும்பிகள் திருக்குற்றாலத் தலபுராணத்தில் ஈடுபட்டு புராணக் கதைகளைப் போற்றி இருப்பர். சொற் சிலம்பங்களில் ஈடுபட்டுள்ள சிலேடை அன்பர்கள் திருக்குற்றாலச் சிலேடை வெண்பா. திருக்குற்றால யமக அந்தாதி, நன்னகர் சிலேடை வெண்பா போன்ற சிற்றிலக்கியங்களில் சிந்தையைச் செலுத்தி வணங்கியிருப்பர். வெண்பா பாடல்களில் விருப்பமுள்ளவர்கள் திருக்குற்றால நன்னகர் வெண்பாவிலும், குழல்வாய்மொழி வெண்பா அந்தாதியிலும் ஈடுபட்டுக் குற்றாலத்துறை இறைவனைத் தொழுது இருப்பர்.*

பிள்ளைத் தமிழ்க் கவிதையில் ஈடுபாடுடையோர் குழல்வாய்மொழி பிள்ளைத்தமிழைப் பாடிய வண்ணம் குற்றால நாதரையும் குழல்

* திருக்குற்றாலம் - பி.ஸ்ரீ. பக். 15

வாய்மொழி அம்மையையும் போற்றியிருப்பர். சிருங்காரச் சுவையாம் உவகைச் சுவை விரும்பிகள் திருக்குற்றால நாதர் உலா. திருக்குற்றால ஊடல், திருக்குற்றாலக் கோவை ஆகிய நூல்களில் ஆர்வம் காட்டியிருப்பர். எல்லாவற்றிற்கும் மேலாக கவிராயரின் ''கவிதைக் கீரிடம்'' எனப் புகழப்பட்ட குற்றாலக் குறவஞ்சி அனைத்துத் தரப்பினரின் நெஞ்சையும் அள்ளியிருக்கும் என்பதில் ஐயமில்லை.

எல்லா நதிகளும் கடலை நோக்கிச் செல்வது போலவே திரிகூடராசப்பரின் சிற்றிலக்கியங்களாகிய நதிகள் எல்லாம் சைவக் கடல் நோக்கியே பயணம் செய்கின்றன எனலாம்.

# 6
# சமுதாயப் பார்வைகள்

## பண்பாட்டுக்களங்கள்

திரிகூடராசப்பக் கவிராயர் படைப்புகள் அனைத்திலும் தமிழ்ப்பண்பாட்டுக் களங்கள் வானவில்லைப் போல வண்ணமயமான அழகுடன் மிளிர்கின்றன அவர் படைத்த கற்பனை மாந்தர்களும் பறவை இனமும் கூடத் தமிழ்ப் பண்பாட்டைக் கட்டிக் காப்பதைப் பல பாடல்களில் காணலாம்.

இல்லற வாழ்வில் ஈடுபட்டிருந்த கணவன் மனைவியர் இன்சொல் மிழற்றும் பச்சைக் கிளிகளை வளர்க்கின்றனர். இசையினும் இனிய சொல் பேசும் எழில் மனைவியை நாணும்படி வைக்க வேண்டும் எனக் கருதி அவர்தம் கணவர் புணர்ச்சிக் கலவி பற்றிய சொற்களைக் குளறிப் பேச அவர் மனைவி நாணாமையால் அவரால் வளர்க்கப்பெறும் பச்சைக் கிளிகள் மிகவும் நாணுகின்றன என்ற செய்தி

*''பண்ணாணு மொழியாரைப் பகர்நாணஞ் செயவேண்டிக்*
*கண்ணான கொழுநர்புணர் கலவிமொழி குளறியதில்*
*விண்ணாண மமையாதான் மிகநாணும் பசுங்கிள்ளை''*

(திருநாட்டுச்சருக்கப் பாடல்-29)

என்ற பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

திருக்குற்றால யமக அந்தாதியில் ஒரு பண்பாட்டுச் சித்திரம் தீட்டப்பட்டுள்ளது. தனம் என்பது செல்வத்தையும் பெண்களுக்குச் செல்வமாகக் கருதக்கூடிய அவர்களின் மார்பகங்களையும் குறிக்கும் அழகான சொல் ஆகும். எனவே இரு பொருள்படும் தனம் என்ற சொல்லை வைத்து சிலம்பம் ஆடியுள்ளார் திரிகூடராசப்பர்

*''வரையா தளிக்குடை மன்னர் பெய் வார்தன மாதர் தனம்*
*வரையா தளிக்குந் தனமல்லவே''*

மன்னர்கள் தங்கள் செல்வங்களை அளவில்லாமல் அள்ளிக் கொடுப்பர் என்பதைத் தொடர்ந்து பெண்களுடைய தனங்களாகிய மார்பகங்களைத்

திருமணத்திற்கு முன் தொடுவதற்கு எந்த ஆடவனுக்கும் அனுமதி இல்லை என்ற கருத்து கூறப்பட்டுள்ளது. திருமணத்திற்கு முன் காதலனேயாயிலும் மார்பகங்களைத் தொட அனுமதிக்கக் கூடாது என்ற பண்பாட்டுக் கருத்து திரிகூடராசப்பக் கவிராயரால் சுட்டிக் காட்டப்பெற்றுள்ளது.

திருக்குற்றாலக் குறவஞ்சியில் தன் மனைவியாகிய குறவஞ்சியைத் நீண்ட காலம் தேடிலைந்து பின்னர் குற்றால வீதியில் அக்குறவஞ்சியைக் கண்டு கூத்தாடினான் சிங்கன் ஆசை நெஞ்சில் அலை மோத மோகமுடன் குறவஞ்சியை நோக்கி,

''கட்டிக் கொண்டே சற்றே முத்தம் கொடுக்கவா சிங்கி!''

என்று ஏக்கத்தோடு கேட்கின்றான். பண்பாடு மிக்க குறவஞ்சிக்கும் ஆசையிருப்பினும் பெண்மைக்கே உரிய மென்மையான தன்மையில்.

*''நடுப் பட்டப்பகலில் நான் எட்டிக் கொடுப்பேனா சிங்கா''*

என்றுரைத்துத் தமிழர் தம் நாகரிகத்தையும் பண்பாட்டையும் காக்கின்றாள்.

*''சேலை உடை தனைச் சற்றே நெகிழ்க்கவோ சிங்கி!''*

என்று மீண்டும் முரண்டு பிடிக்கும் காதற் தலைவனிடம்,

*''...சும்மா*
*நாலு பேர் முன் எனை நாணம் குலையாதே சிங்கா''*

(பாடல் 44)

என்று ஆசையை அடக்கிப் பண்பாட்டைக் காத்த குறவஞ்சி தமிழ்ப் பண்பாட்டுப் பாவை என்பதில் ஐயம் ஏது?

## வாழ்வியற் செய்திகள்

இலக்கியம் காலத்தில் கண்ணாடி என்பதற்கேற்ப திரிகூடராசப்பக் கவிராயர் தம் படைப்புகளில் அன்றைய சமுதாயத்தைப் படம்பிடித்துக் காட்டியிருப்பதைக் காணலாம். பண்டமாற்று முறையில் வாணிகம் நடைபெற்றது. என்ற செய்தியை ஆசிரியர் திருநாட்டுச் சருக்கத்தில் சொல்கின்றார். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், ஆகிய நான்கு வகைப்பட்ட நிலத்து மக்களும் எப்படி நல்விணக்கத்தோடு வாழ்ந்தனர் என்பதைக் காட்டுகின்றார்

குறஞ்சி நில மகளிர் தம் கொல்லையில் விளைந்த தினையைக் கொடுத்துப் பொன்னைத் தேர்ந்தெடுத்துக் கொள்வர். மருத நிலப் பெண்கள் நெல்லை அளந்து கொடுத்து முத்தைப் பெறுவர். முல்லை நில மகளிர் பால் அளந்து விற்ப நெய்தல் நில மாதர் அதற்கு மீனை அளந்து கொடுப்பர். அவர் மோரை அளந்து தர உப்பு அளத்திலுள்ள மகளிர் முத்தை அளந்து கொடுப்பர் என்ற செய்தியை,

*கொல்லைவா யேனலுக்குப் பொன்கொழிப்பர் குறமகளிர்*
*நெல்லிலா ரங்கொழிப்பர் நீலவிழிக் கடைசியர்கண் ,*
*மெல்லியார் பாலளப்ப மீனளப்பர் நுளைமாதர்*
*முல்லையார் மோரளப்ப முத்தளப்ப ரளத்தியரே''*

(திருநாட்டுச்சருக்கப் பாடல் 34)

என்ற பாடலால் அறிந்து அக்காலச் சமுதாயத்தைத் தெரிந்து கொள்ளலாம்.

குற்றாலக் குறவஞ்சியில் குறத்தியிடம் மக்கள் குறி கேட்கும் முறை சமுதாயத்தில் நிலவியதைக் காணலாம். ஆடவர்களுக்கு வலது கையினையும், மகளிர்க்கு இடது கையையும் பார்த்துக் குறி சொல்வதை

*''மன்னவர் தமக்கு வலதுகை நோக்கி*
*இன்னகை மடவார்க்கு இடதுகை பார்த்து''*

(குறவஞ்சி பாடல்-61)

என்ற பாடல் வரிகளால் அறியலாம். குறிபார்க்கும் முன்னே, தரையை மெழுகி, கோலமிட்டு, நிறைகுடம் வைத்து, அறுகம் புல்லும், தண்ணீரும், விளக்கும் கொண்டு வைக்க வேண்டும் நிறை நாழி நெல் வைக்க வேண்டும் என்றெல்லாம் குறத்தி குறிப்பிடுவது அன்றைய பழக்கவழக்கங்களைக் காட்டுகின்றன. சைவ நெறியின் பால் பற்றும், சைவ நெறியைப் பின்பற்றாதாரை ஒறுக்க வேண்டும் என்ற உணர்வும் நிரம்பியிருந்தது. மகளிர் பல்வேறு வகைப்பட்ட அணிகலன்களை அணிந்திருந்தனர், குறிசொல்லி பரிசு பெற்ற குறவஞ்சி அணிந்திருந்த அணிகலன்களால் அவற்றை அறியலாம்.

*குப்பி, தொங்கல், நெற்றிச் சுட்டி, மூக்குத்தி, சவடி,*
*முத்தாரம், அரைஞாண், பாடகம், பாதம், மணிக்கெச்சம்*
*சிலம்பு, தண்டை, தோள்வளை, குடகம், வளை*
*கடகம், நெளி, கொப்பு, குழை, தண்டொட்டி முத்திரை மோதிரம்''*

போன்ற அணிகலன்களை மகளிர் பயன்படுத்தினர் என்பதை கவிராயர் பல்வேறு இடங்களில் குறிப்பிடுகிறார்.

ஆந்தையின் அலறல் நல்ல சகுனமாக ஏற்கப்பட்டது. யாராவது தும்மும் ஒலி நன்மையுடைத்து; இடப்பக்கம் காக்கை பறந்து செல்வது நன்று எனவும் நம்பிக்கை நிலவியிருந்தது. பல்லி சொல்லை நம்பும் பழக்கம் உண்டென்று அறிகிறோம். காக்கை, பல்லி, ஆகியவற்றின் செயல்களை நம்பும் பழக்கம் சங்க காலத்திலே காணப்பட்ட பழக்கத்தின் மரபு மாறாத ஒரு வளர்ச்சியே என்றால் மிகையன்று. டாக்டர். மு.வரதராசனார் அவர்கள், ''காக்கையும், பல்லியும் பழந்தமிழ்ச்

சமுதாயத்து மக்களிடையே நிலவிய மூட நம்பிக்கையினை இன்று நமக்குச் சுட்டிக் காட்டும் சின்னங்களாகச் சங்க இலக்கியத்துள் விளங்குகின்றன'' என்று கூறுகின்றார்.

மன்னர்கள் கோயில் திருப்பணிகள் செய்த வரலாற்றுக் குறிப்புகளையும், மகுடாகம முறைப்படி வழிபாடுகள் நடந்தன என்ற செய்தியும் கிடைக்கின்றன.

குற்றாலக் குறவஞ்சியில் குறத்தி நாடு நகரங்களையெல்லாம் சுற்றித் திரிந்து வருவதாகக் காட்டுவதையும், இன்றைக்கும் அவ்வின மக்கள் ஓரிடத்தில் தங்காமல் சுற்றியலைந்தே வாழ்க்கையை நடத்துவதையும் ஒப்பு நோக்கலாம்.

புறநானூற்றில் அதியமான் நெடுமான் அஞ்சியின் முன்னோர் தமிழகத்திற்குப் பெறற்கரிய அமுதம் போன்ற கரும்பினைக் கொண்டு வந்தார்கள் என்ற அரிய செய்தியை ஔவையார் சொல்கின்றார்.

*''அரும்பெறல் அமிழ்தம் அன்ன*
*கரும்பு இவண் தந்தோன்பெரும் பிறங்கடையே''*

(பாடல்-392)

அதைப் போலவே சீனாவிலிருந்து புகையிலை கப்பல் வாயிலாக இறக்குமதி செய்யப்பட்ட செய்தி, குற்றாலக் குறவஞ்சியில் சொல்லப்படுகிறது. வசந்த வல்லியிடம் குறி சொல்லும் குறவஞ்சி,

*''....கப்பற்*
*சீனச் சரக் குத்துக்கிணி கிள்ளித்தா அம்மே''*

என்று கேட்பதிலிருந்து புகையிலை இறக்குமதி செய்யப் பெற்றது என்ற சுவையான செய்தியை அறியலாம்.

ஆங்கிலக் கவிதையின் வரலாற்றுப் பேராசிரியர் தாமசு வார்டன் பழைய இலக்கியங்களை கற்பதற்கான காரணங்களைக் கூறும் போது, ''இலக்கியம் ஒரு காலத்திற்குரிய சிறப்புப் பண்புகளை அவ்வாறே பொறிக்கின்றது. அக்காலப் பழக்க வழக்கங்களை ஓவியம் போல் சித்திரித்துத் திறம்பட வெளியிடுகிறது. வாழ்வின் உண்மையான சித்திரத்தைப் பிற்காலத்தவருக்கு வழங்குகிறது.'' என்று கூறுகிறார்.* அதற்கேற்ப திரிகூடராசப்ப கவிராயர் படைப்புக்கள் அக்காலப் பழக்க வழக்கங்களைத் தெளிவாகப் புலப்படுத்துகின்றன எனலாம்.

---

* இலக்கியக் கொள்கை - மொழிபெயர்ப்பு - எல். குளோறியா சுந்தரமதி, பக்.391

# 7
# சிறப்புச் செய்திகள்

திரிகூடராசப்பர் காலத்துச் சிறப்பாக கருதப்பட்ட கருத்துகள், அவரது படைப்புகள் முழுவதும் பரவிக் கிடக்கின்றன. அவற்றின் சிலவற்றை நாம் காணலாம்

## ஆட்சியாளர்கள் கடமை

சங்க கால மக்கள் மன்னனை உயிராகக் கருதினார் என்பதை,

*"நெல்லும் உயிரன்று நீரும் உயிரன்று*
*மன்னன் உயிர்த்தே மலர் தலையுலகம்"*

என்ற புறநானூற்று வரிகளால் அறியலாம், திரிகூடராசப்பர் மன்னராட்சி காலத்தில் வாழ்ந்தவர் ஆதலால், மன்னர்கள் மக்களைக் காக்கும் மாண்பினை தலபுராணம் திருநகரச் சருக்கத்தில் அவர் தெளிவுப் படுத்துகின்றார்.

அறநூல் உணர்ந்து செங்கோல் செலுத்தும் மன்னர்கள் காலை நேரங்களில் உடனிருக்கும் அமைச்சர்களோடு கலந்து அறநூல்களில் சொல்லப்பட்ட நீதிக் கருத்துக்களை ஆய்வு செய்து குடிமக்களை முதலாக வைத்து மற்றைய உயிர்களையும் பாதுகாப்பர். மேலான நூல்களைப் படைக்கும் ஆற்றல் பெற்ற பாவலர்களுக்கும் அறநூற் பயிற்சி யுடையார்க்கும் உதவுவர், என்பதைக்

*"காலை தொறு முழையரொடு நூலாய்ந்து குடிமுதலாங் காப்புப் போற்றி*
*மேலை நூற்பாவலர்க்கும்."*

(திருநகரச்சருக்கம் பாடல் - 34)

என்பதன் மூலம் அறியலாம். மேலும் அறச்சாலைகளில் சிவனடியார்களோடும் தம் உறவினர்களோடும் மன்னர் அன்புடன் அமர்ந்து கலந்து உண்பர். மாலை நேரங்களில் ஒற்றர்கள் தரும் செய்திகளை ஆய்வு செய்து நாடு உறங்கும் போதும் அதனைக் காப்பது மன்னர் கடமையாகும் என்பதைச்,

*"சாலை தனில் சிவபெருமான் றமர்களொடுந்*
*தமர்களொடுந் தகவாய் யுண்டு*
*மாலை தொறு மொற்றாய்ந்து துயிலிடத்தும்*
*பார்காப்பர்"*

(திருநகரச் சருக்கம் பாடல்.34)

என்ற பாடலால் அறியலாம்.

## மள்ளர் கடமை

மன்னர்களுக்கு உரிய வரியாக விளைச்சலில் ஆறில் ஒரு பங்கினை உழவு செய்யும் மள்ளர் அளிப்பர் என்பதைத் தலபுராணத்தில் உள்ள பாடல்களால் அறிவதோடு மன்னருக்குக் கொடுத்தது போக மீதியில் கோயில்களுக்கு ஐந்தில் ஒரு பங்கும் கொடுப்பர் என்ற செய்தியை,

*"பேறுகண்டு களிகூரக் களமர் முதலோர்க்குதவிப்பெருமை வேந்தற்*
*காறிலொன்று கடமைகொடுத் தைந்திலொன்று தேவராலயங்கட்*
*கீந்து"*

(திருநாட்டுச்சருக்கம் பாடல் 18)

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

## ஈழம், சிங்களம்

குறத்தி குறி சொல்லுவதற்காகத் தான் சென்று வந்த நாடுகளாக ஈழம், சிங்களம் ஆகியவற்றைத் தனித்தனியே குறிப்பிடுவது திரிகூட ராசப்பக் கவிராயர் காலத்தில் அவை தனித்தனி நாடுகளாக இருந்ததைச் சுட்டிக்காட்டுகிறது.

## தத்துவம்

பசுவிடமிருந்து கறந்தபால் மறுபடியும் மடியின் உட்புகுவதில்லை. அதைப் போல் வீழ்ந்த கனி மறுபடியும் மரத்தினில் ஒட்டி விடுதலும் இல்லை. ஆதலால் இறந்தவர் மறுபடியும் பிறப்பர் என்பதுவும் பொருத்தம் உடையது அன்று; இறந்தவர்கள் உயிர் மேலோ கீழோ பறந்திடக் காண்பதில்லை என்ற கருத்தைக் கீழ் கண்ட பாடலால் அறியலாம்.

*"கறந்தபான் முலைபு காது கழிகனி மரம்பு காதால்*
*இறந்தவர் பிறப்ப தில்லை யிறந்தவ ருயிர்கள் கீழ்மேற்*
*பறந்திடக் காண்பதில்லை"*

(புட்பகந்தச் சருக்கம் பாடல் 12 வரி 1-3)

## தேனீக்களின் தன்மை

பொதுவாக எல்லா மலர்களிலும் தேனெடுக்கும் இயல்புடைய தேனீ வேங்கை மரப்பூவின் தேனை எடுக்க விரும்பாது என்ற அரிய செய்தியை தருமசாமி சருக்கத்தில் காணலாம். செம்புப் பாத்திரத்தில் வைத்த பால் தன் குணம் கெடும் என்ற செய்தியும் காணப்படுகிறது.

## மயிலின் இயல்பு

கண்கவர் வனப்பு மிகு தோகை மயில் கூரிய பற்களையுடைய பாம்புகளை வெல்லும் தன்மையுடையதாகும். எனினும் அது பச்சை வண்ண ஓந்தியிடம் தோற்று விடும் என்ற செய்தி,

*''கூர்ச்சிவா யரவம் வீழ்த்திக் கோம்பி வாய் வீழும் புட் போல்''*

(கவுற்சனச் சருக்கம் பாடல்-10)

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

## மகளிர் உடல் வனப்பு

இனிய இல்லற வாழ்விற்குரிய கன்னிகையின் இலக்கணத்தை பாதாதிகேச முறையில் பாவையின் வனப்பு அமைய வேண்டிய பான்மையை தருமசாமி சருக்கத்தில் திரிகூடராசப்பக்கவிராயர் இனிதாக எடுத்துரைக்கின்றார். உள்ளங்கால் மலர்ந்த தாமரை போலச் சிவந்திருத்தல் வேண்டும்; புற அடி புத்தகம் போலும் பரடு தராசுத் தட்டுக்களைப் போல் சமனாக அமைதல் வேண்டும். வெற்றியைத் தரும் குதிக்கால் பொற்பந்து போலும்; கணைக்கால் பாம்பு போலும், முழங்கால் இணைப்பு நண்டு போலும்; அடித்தொடை வாழை போலும்; தொடையின் முன்பாகம் யானைத் துதிக்கை போலும்; இடைபூங்கொடி போலும்; நிதம்பம் தேர்போல்வது. நாபி நீர்ச்சுழி போன்றது; வயிறு ஆல்இலை போலும்; தனங்கள் தாமரை போலும்; இருக்க வேண்டுமென்பதை,

*''தோடலர்பங் கயமிருதாள் புறவடிபுத்தகம் பரடு துணைத்த ராசால்*
*ஆடல்பெறு குதிகனகப் பந்துகணைக் காலரவ மலவன் சானு*
*நீடரம்பை தொடைகுறங்கு கரிக்கைகொடி யிடைமணித்தேர் நிதம்ப நாபி*
*நாடுநீர்ச் சுழியு தர மாலமயி ரொழுங்கு முலை நாளங் கஞ்சம்''*

(தருமசாமி சருக்கம் பாடல்-13)

என்ற பாடலாலும்,

விரல்கள் மாந்தளிர் போன்றும், கூரிய நகம் கிளி மூக்கு போன்றும், சிவந்த கைகள் காந்தள் மலர் போன்றும், முன் கை வீணை போன்றும்,

இருதோள்கள் மூங்கில் போன்றும், கழுத்து சங்கு போன்றும், காதுகள் வள்ளைப் பூ போன்றும், மூக்கு குமிழம்பூ போன்றும்,முகம் முழுநிலா போன்றும், இரு கன்னம் கண்ணாடி போன்றும், கண்கள் நீலோற்பலம் போன்றும், பற்கள் முல்லை அரும்பு போன்றும், வாய் இதழ்கள் செவ்வல்லியின் இதழ்கள் போன்றும் நெற்றி பிறைமதி போன்றும், புருவங்கள் இரு சிலைகள் போன்றும், நீண்ட கறுத்த கூந்தல் நீருண்ட மேகம் போலும் அமைந்திருக்க வேண்டும் என்பதை,

*''விரல்பவவங் கிளிமூக்கு வள்ளுகிர்செங் கரங்காந்தள் வீணைமுன்கை*
*வரையிருதோள் வளைமிடறு வள்ளைகுழை குமிழ்மூக்கு வதனந் திங்கள்*
*இருகவுள்கண் ணாடிநாட்டங் கருங்குவளை முல்லைநகையிதழ்செவ்*
*வாம்பல்*
*ஒருபிறையு மிருசிலையு நுதல்புருவம் பருவமுகி லுயர்மென் கூந்தல்''*
(பாடல்-14)

என்ற தருமசாமி சருக்கப் பாடலாலும் அறியலாம்.

## கற்புடைய மகளிர் செயல்கள்

வனப்பு மிகு வனிதையர் தம் கற்புடைய வாழ்வில் கடைப்பிடித் தொழுக வேண்டிய பன்னிரெண்டு செயல்கள் பற்றி திருநகரச் சருக்கத்தில் சொல்லப்படுகின்றன.

அவையாவன:

1. அதிகாலையில் எழுந்து நீராடிப் பின் சமையலறையில் புகுதல் வேண்டும்.
2. உணவுப் பொருள்களை அன்பொடு சமைத்தல் வேண்டும்.
3. சுவையுடன் கூடிய உணவினை உண்பித்தல் வேண்டும்.
4. பிறகு ஆகட்டும் என்று சொல்லாமல் வந்த விருந்தினரை உபசரித்தல் வேண்டும்.
5. உரிய காலத்தில் கணவனொடு கூடி இன்புறுதல் வேண்டும்
6. நன்மக்களைப் பெறுதல் வேண்டும்.
7. அச்சம்
8. மடம்
9. நாணம் எனும் முக்குணங்களோடு பொருந்தி இருத்தல் வேண்டும்.
10. கணவன் முன் உறங்கத் தான் பின் உறங்குதல் வேண்டும்.
11. கணவன் எழுவதற்கு முன் எழுதல் வேண்டும்.
12. காலையில் கணவனைத் தொழுது எழுதல் வேண்டும்

என்ற இப்பன்னிரண்டு குணங்களும் கற்புடைய மகளிர் கடைப்பிடிக்க

வேண்டிய குணங்கள் ஆகும் என்ற செய்தியைத் திருநகரச் சருக்கத்தில் காணலாம்.

*"சிறுகாலை யட்டில் புக வருத்தியுறச் சமைத்தல்*
*சுவை திருத்தி யூட்டல்*
*மறுகாலை யென்னாது விருந்தமைத்தன்*
*மகப்பெறு தல் மட நாணச்சம்*
*பெறுகாலை யின்புறுதல் முன்னுறங்கப்*
*பின்னுறங்கல் பின்னெ ழாதல்*
*உறுகாலை தொழுதெழுதல் பன்னிரெண்டு*
*மந்நகர்க்கற் புடையோர் செய்கை"*

(பாடல்-31)

## எண்வகைத் திருமண முறைகள்

வடநூலில் சொல்லப்பட்டுள்ள எண் வகைப்பட்ட திருமண முறைகளைத் தல புராணத் தருமசாமி சருக்கத்தில் காணலாம். ஒரு தலைவனும் தலைவியும் மனம் கலந்து பிறர் அறியாதபடி இணங்குதல் கந்தருவம் ஆகும். ஒரு பெண் உறங்கும் போது அவளறியாது அவள் கருத்தின்றி புணர்தல் பைசாசம் எனப்படும். விருப்பமில்லாத பெண்ணை வழிந்து புணர்தல் ராக்கதம் எனப்படும். பெற்றவர்கள் குறிக்கும் ஓர் அரிய செயலைத் தன்னாற்றலால் வீரமுடன் செய்து பெண்ணை மணப்பது அசுரமணம் எனப்படும். பொருளைக் கொள்ளாது மகட்கொடை செய்தல் பிரசாபத்தியம் எனப்படும். பொருளை விரும்பி மகளை ஈதல் ஆரிடம் எனப்படும். உலகறிய தீ வேட்டு அதன் முன்னே மகளைக் கொடுத்தல் தெய்வ மணம் எனப்படும். கல்வியிற் சிறந்த வல்லோனை அழைத்து மகளைக் கொடுத்தல் பிரமமணம் எனப்படும் என்ற செய்திகள்,

*"இருவரு மிணங்கு களவுகந் தருவ மனந்தரி விணங்கல்பை சாசம்*
*பெருவலி யதனால் மருவுத லரக்கம் பேரிலக் கெய்தலே யசுரம்*
*பொருளுகந் தளித்த லாரிடம் பிரசா பத்தியம் பொருள் கொளா தளித்தல்*
*அருமகம் வேட்பித் தளித்தலே தெய்வ மழைத்தெதிர் கொடுத் தேலே பிரமம்"*

(பாடல்-19)

என்ற பாடலில் காணப்படுகின்றன.

## கடவுளர்களின் வாகனங்கள்

கடவுளர்களின் வாகனங்களாகப் பறவைகளும் பெருச்சாலியும் இருக்கும் தகவல் குற்றாலக் குறவஞ்சியில் காணப்படுகிறது.

முற்காலத்திலே பிடித்த பெரிய பெருச்சாலியைப் பிள்ளையார் தமக்குரியதாக்கிக் கொண்டார். அவரின் தம்பியாகிய முருகப்பெருமானோ ஆடும் இயல்புடைய மயிலைப் பிடித்துக் கொண்டு போய் விட்டார். அருமையுடைய அன்னப்பறவையினை குற்றால நாதரானவர் பிரமனுக்குத் தந்து விட்டார். அழகான செம்பருந்தைத் திருமால் கொண்டு போய்விட்டார். என்ற தகவல்கள்,

> *"முன்னாட் படுத்த பழம்பெருச் சாளியை*
> *மூத்த நயினார் மொடு வாய்க் கொடுபோனார்*
> *பின்னான தம்பியார் ஆடு மயிலையும்*
> *பிள்ளைக் குறும்பாற் பிடித்துக் கொண் டேகினார்*
> *பன்னரும் அன்னத்தை நன்னகர் ஈசர்*
> *பரிகவம் ஈந்திடும் பார்ப்பானுக் கீந்தனர்*
> *வன்னப் பருந்தொரு கள்வன் கொடுபோனான்"*
>
> (பாடல்-133)

என்ற குற்றாலக் குறவஞ்சிப் பாடலில் காணப்படுகின்றன.

## அறிவியற் கருத்து

இயற்கையின் வளங்களையும் இறைவன் திருவிளையாடல்களையும் பாடிய பாவலர் திரிகூடராசப்பர் இயற்கையோடியைந்த அறிவியல் கருத்துகளையும் வழங்கியுள்ளார். வளமிகுந்த நாடு உருவாக அந்நாடு இயற்கையான நீர்வளத்தினை உடையதாக அமைய வேண்டும். அந்நீர்வளம் மழைபொழிதலால் ஏற்படும். மழை பொழிதலுக்குரிய வழி என்ன என்று ஏங்கும் பொழுது உலகில் அதிகம் மழைபொழியும் ''சிரபுஞ்சி'' போன்ற இடங்களில் உள்ள சோலைகளும் மரங்களுமே காரணமாக இருக்கின்றன என்பர் இன்றைய ஆராய்ச்சி அறிஞர். இதனைத் திரிகூடராசப்பக்கவிராயர் மெய்யுணர்வைப் பெருக்கும் திரிகூட மலையின் மேலிடம் மதுகங்கையைப் பெருக்கும். சிவனுக்குரிய மதுகங்கை பல தடாகங்களை நிறைவிக்கும். அத்தகு தடவாவிகள் செய்களை வளப்படுத்தி மருத நிலத்தில் பெருஞ்சோலைகளாகிய பொழில்களை வளர்க்கும். தேன் மலர்கள் நிறைந்த பொழில்கள் கரிய மேகங்களைப் பெருக்கும். அம்மேகங்கள் அதிக மழையைப் பொழியச் செய்யும் என்ற அரிய அறிவியற் செய்தி.

> *"மெய்வளர்க்குந் திரிகூடமிசைவளர்க்கு மதுகங்கை*
> *சைவமதுகங்கை பல தடம் வளர்க்குந் தடவாவி*

*செய்வளர்க்கும் செய்கழனி பொழில்வளர்க்குந்*
*தேம்பொழில் கண்*
*மை வளர்க்கும் மை மேகமாரிதனை வளர்க்குமால்''*
(திருநாட்டுச்சருக்கம் பாடல்.33)

என்ற பாடலில் சொல்லப் பட்டிருப்பதைக் கண்டு பெருமகிழ்வு எய்தலாம். இயற்கையோடு இயைந்த வாழ்வில் அறிவியலும் அடங்கும் என்பதை நாம் உணரலாம்.

# 8
# இலக்கிய ஒப்பீடு

**தொ**ல்காப்பியர் காலம் முதல் திரிகூடராசப்பக் கவிராயர் காலம் வரையிலும் உள்ள நூல்களை ஆழ்ந்து கற்பார்க்கு அவற்றின் ஊடே உள்ளுறையாய் இழையோடுகின்ற ஒருமித்த மரபுணர்ச்சி தோன்றாமற் போகாது. ஒரு புலவர் கூறிய கருத்தோ, சொற்றொடரோ, சொற்களோ பிற புலவர் பாடலிலும் இடம்பெற்று வருமானால் அது புலவரின் நூற்பயிற்சியையும், மரபுணர்ச்சியையும் காட்டுவதாகும். ஆகவே ஒரு புலவரை ஆராயும் போது அவருக்கு முந்திய புலவர்களின் பாடல்களையும், கருத்துக்களையும் அவர் அணுகிக் காணும் முறைகளையும், அவர் கையாண்டிருக்கும் முறைகளையும் ஆராய்வது சிறந்த நடைமுறையாகும்.

திரிகூடராசப்பக் கவிராயர் படைப்புக்களை அவருக்கு முன் எழுந்த இலக்கியங்களோடு ஒப்பிட்டுக் காண்பதோடு அவருக்குப் பின் எழுந்த இலக்கியங்களுக்கு அவர் வழிகாட்டியாய் அமைந்ததையும் ஒப்பிட்டுக் காணலாம்.

## தொல்காப்பியம்

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியம் ஓர் இலக்கண நூலும் இலக்கிய நூலுமாகும். தமிழ் இலக்கியங்களில் முதலாக நின்றிலங்குந் தொல்காப்பியமே எல்லா இலக்கண. இலக்கியங்களுக்கும் வழிக்காட்டியாகத் திகழ்ந்து வருகின்றது. தொல்காப்பியங் காட்டும் நெறிமுறையைத் திரிகூடராசப்பக் கவிராயர் எவ்வாறு போற்றிப் பேணினார் என்பதைக் காணலாம்.

தலைவியைப் பிரிந்த நிலையைக் கூறும்போது தலைவனுக்குத் தலைவியைக் காண வேண்டும் என்ற வேட்கையும், அவளை இடைவிடாது எண்ணுதலும், அதனால் மெலிதலும், தன் நெஞ்சில் மிகும் காதல் துயரினைப் பிறர்க்கு எடுத்துரைத்தலும், இதனால் தாம் என்ன செய்கின்றோம் என்று அறியாமல் நாணத்தின் எல்லையைக் கடத்தலும்

அவன் காணுகின்றவையெல்லாம் அவள் வடிவமாகத் தோன்றுதலும், இதனால் அறிவு திரிதலும், மயங்குதலுமாகிய நிலையைத் தொல்காப்பியர் களவியலில்

*''வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்*
*ஆக்கஞ் செப்பல் நாணுவரை இறத்தல்*
*நோக்குவ எல்லாம் அவையே போறல்*
*மறத்தல் மயக்கஞ் சாக்காடு என்றிச்*
*சிறப்புடை மரபினவை களவென மொழிப''*

*(நூற்பா - 9)*

என வரும் நூற்பாவால் விளக்குகிறார்.

இதையே அடியொற்றிப் போற்றும் திரிகூடராசப்பக் கவிராயரும் குற்றாலக் குறவஞ்சியில் சிங்கன் சிங்கி காதல் உணர்வை வெளிப்படுத்தும் பொழுது.

*....அவள்*

*''கிள்ளைமொழி கேட்கவொரு கிள்ளையா னேனிவையே''*

எனறும், சிங்கியைப் பிரிந்த சிங்கன் புலம்புகின்றான். நெஞ்சில் வருத்தம் மிகவே சிங்கன் தான் காணும் காட்சியெல்லாம் தலைவிபோல் தோன்றும் நிலையை,

*''கண்ணிற் கண்டிடம் எல்லாம் அவளாகத் தோணுதே''*

என்றும் கூறிச் சிங்கன் புலம்புகின்றான் இவ்வாறு சிங்கன் புலம்புவதாகக் கவிராயர் அமைந்திருப்பதெல்லாம் தொல்காப்பியங் காட்டும் தொன்மை மரபு தழுவியதே ஆகும்.

## நற்றிணை

சங்க காலத்தில் அழகிய தளிர்களை மகளிர் தம் மார்பகங்களில் மீது அணிந்து கொள்வது உண்டு. இச்செய்தி.

*''பொரிப்பூம் புன்கி னெழிற்றகை யொண் முறி*
*சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி''*

என்று வரும் நற்றிணைப் பாடலடிகளால் விளங்கும். திரிகூடராசப்பக் கவிராயரும், சங்க நூற் பயிற்சி மிக்கவராகலானும், மரபுவழி நிற்குஞ் செம்மலாகலானும் தமது நூலிலேயும் இக்கருத்தை எடுத்துக்காட்டி நன்கினிது விளக்குகிறார்.

*"மட்டார் குழலார் வனமுலையு நெற்பொலியும்*
*கொட்டாரம் பட்டடை சேர் குற்றாலம் - அட்டாங்க*
*யோகத் திருப்பா ருளத்திருப்பார் - மங்கையொரு*
*பாகத் திருப்பார் பதி" (பாடல்-93)*

என்ற வெண்பாவால் தனத்தின் கண் தளிரை மகளிர் அணிந்து கொண்ட செய்தியைத் தருகிறார் கவிராயர். இதனால் கவிராயர் சங்கநூற் புலமையும், பண்டைப் பழக்கவழக்கங்களைப் புரக்கும் தன்மையும் உடையவர் என்பதை அறியலாம்.

## திருக்குறள்

தெய்வத்திருமறை வள்ளுவத்தின் நிழல் படாத இலக்கியங்களைக் காண்டல் அரிதேயாம். திரிகூடராசப்பக் கவிராயரும் குறட்கருத்துக்களை அவர் நூல்களில் பரவலாகப் பெய்து வைத்திருக்கின்றார். காலமறிதல் அதிகாரத்தில் வள்ளுவர்.

*"பகல் வெல்லுங் கூகையைக் காக்கை இகல்வெல்லும்*
*வேந்தர்க்கு வேண்டும் பொழுது"*

என்னும் திருக்குறளில் காலமறிந்து வேந்தன் செயலாற்ற வேண்டும் எனச் சொல்லிய பின் காக்கையானது பகல் நேரத்தில் கூகையை வெல்லுந் திறனுடையது என்று கூறுகின்றார். இக்கருத்தையே மனதில் கொண்ட திரிகூடராசப்பக் கவிராயரும், கோட்டான் பறவைக்குப் பகலில் கண்பார்வை இல்லையாதலால் காக்கையும் (வாயசமும்) அதனை வருத்தும் எனப் பொருள்படும்படி.

*"வாட்டனை வேந்து மணிப்பகலால் வாயசமும்*
*கோட்டானை யங்கடல்செய் குற்றாலம்"*

என்று பாடுகின்றார். வள்ளுவப் பெருந்தகையார் பொது மகளிர் தொடர்பைக் கடிந்து கொள்கின்றார், "வரைவின் மகளிர்" என்னுமதிகாரமே படைத்து அறன் வலியுறுத்துவார்.

*"அன்பின் விழையார் பொருள் விழையும் ஆய் தொடியார்*
*இன்சொல் இழுக்குத் தரும்"*

என்ற குறட்பாவில் கூறிப்போந்த அறக் கருத்தையே கவிராயரும்

*பூசி உடுத்து முடித்து வளையிட்டுப்*
*பொட்டிட்டு மையிட்டுப் பொன்னிட்டுப் பூவிட்டுக்*
*காசுபறித்திடும் வேசையர்...*

என்று கணிகையர் தம் இழிகுணத்தையுங் குறிக்கிறார்.

## சீவகசிந்தாமணி

மணநூல் என்றுஞ் சிறப்பிக்கப் பெறுவதான சிந்தாமணிக் காட்சிகளும் திரிகூடராசப்பக் கவிராயரின் கருத்தில் பதிந்து நூலிலும் நிலைத்தன, சீவகன் குணமாலையை எண்ணி காமநோய் மீக்கூரப் பெற்றானாகப் புலம்புகிறாள்.

*''படைமலர் நெடுங்கணாள் பரவை யேந்தல்குல்*
*மிடைமணி மேகலை நோற்ற வெந் தொழிற்*
*புடைதிரள் வனமுலைப் பூணு நோற்றன*
*அடிமலர்த் தாமரைச் சிலம்பு நோற்றவே''*

என்ற சிந்தாமணிச் செய்யுள் சீவக நம்பி புலம்பித் தவிக்கும் நிலையைத் திருத்தக்கத்தேவர் விளக்குவதாகக் காட்டுகின்றது. குணமாலையுடன் யாண்டும் பொருந்தியிருக்க மேகலையும், சிலம்பும், கச்சும் எத்தகைய நோன்பு செய்தனவோ? என்ற அவனது கேள்வியில் ''நான் அத்தகைய நோன்பு செய்திலனோ'' என்று எண்ணுவது போலவே திரிகூடராசப்பக் கவிராயரின் சிங்கனும் சிங்கியை எண்ணி

*''கட்டிக் கிடக்க முலைக் கச்சாய்க் கிடந்திலனே''*

என்ற ஏங்குவதைக் காணலாம்.

## தேவார, திருவாசகம்

மூத்த தமிழின் மூவர் தேவாரப் பாடல்களின் அருட்கருத்துகள் பலவற்றையும், தேன் பிலிற்றுந் திருவாசகத்தின் மறைமொழிகளையும் திரிகூடராசப்பக் கவிராயர் தனது நூல்களில் எடுத்தாண்டு போற்றுகின்றர்,

*''உற்றாரா ருளரோ - உயிர்*
*கொண்டு போம் பொழுது*
*குற்றாலத்துறை கூத்தனல் லாணமக்*
*குற்றா ராருளரோ''*

என வரும் திருநாவுக் கரசு சுவாமிகளின் பாடற்கருத்தும்,

*''உற்றாரை யான் வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்*
*கற்றாரை யான் வேண்டேன் கற்பனவு மினியமையுங்*
*குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தா உன் குரை கழற்கே*
*கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே''*

என்று வரும் மணிவாசகப் பெருந்தகையின் பாடற்கருத்தும் நிறைய, நம் கவிராயராற் பாடப் பெற்ற பாடல்.

*"சுற்றாத ஊர் தோறும் சுற்ற வேண்டாம் புலவீர்*
*குற்றாலம் என்றொருகாற் கூறினால்-வற்றா*
*வடவருவி யானே மறுபிறவிச் சேற்றில்*
*நட வருவி யானே நமை"*

இப்பாடலின் கண்ணே தேவாரத்தில் தெளிவும், மணிவாசகத்தின் உருக்கமும், பிழிவாகக் காணப்படுவதையுணரலாம். மேலும் அருள் நாட்டங் கொண்டு உயிர்கள் இறைவனை நாடிச் செல்லாதபடித் தடைக்கல்லாகச் சிலபோது உடம்பு ஆகிவிடுகின்றது. மணிவாசகரும் திருவாசகத்தில் ''ஊனார் புழுக்குரம்பை' 'மலமாக் குரம்பை' என்றெல்லாங் குறிப்பிட்டதைப் போலவே கவிராயரும் 'நாறுங்குரம்பை இது' எனக் குறிப்பிடுவர்.

## பெரிய புராணம்

பெரிய புராணத்தில் நம்பி ஆரூரைக் கண்டு பரவை நாச்சியார் காதல் கொள்கிறார். காதல் உணர்வுகள் கிளர்ந்தெழ தோழியர் ஆரநறுஞ் சேறாட்டி, அரும்பனிநீர் நறுந்திவலை அருகுவீசிக் குளிரச் செய்கின்றனர். ஆனால் அவையெல்லாம் காதல் நோயால் வாடும் பரவைநாச்சியாருக்குப் பேரழலின் நெய் சொரிந்தது போலாயிற்று. அக்காட்சியைச் சேக்கிழார் சுவாமிகள்.

*''மலரமளித் துயிலாற்றாள்; வருந்தென்றல்*
*மருங்காற்றாள்; மங்குல் வானில்*
*நிலவுமிழும் தழலாற்றாள்...'''*

என்று குறிப்பிடுகின்றார் சேக்கிழார் பெருமான் குறிப்பிடும் இதே காட்சியைக் குற்றாலக் குறவஞ்சியில் வசந்தவல்லியின் நிலையாகத் திரிகூடராசப்பக்கவிராயர் பாடியிருப்பதையும் காணலாம்.

*''முருகு சந்தனக் குழம்பு பூசுவார் விரகத்தீயை*
*மூட்டி மூட்டி விசிறி வீசுவார்*
*கருகுதேயுடல் உருகு தேயென்பார்''*

(பாடல்,30)

*''விண்ணிலே நெருப்பை வைத்தாய் தண்ணிலாக்*
*கொடும்பாவி வெண்ணிலாவே''*

(பாடல்-31)

என்ற பாடல் பகுதிகளிலிருந்து கவிராயரின் சைவ சமய நூற்பயிற்சியையும், பற்றினையும், அறிந்தின்புறலாம்.

## கம்பராமாயணம்

கம்பரின் காப்பியக் கருத்துக்களும் திரிகூடராசப்பக் கவிராயரால் சிறப்பாக எடுத்தாளப்பட்டுள்ளன. ஒரே தாய் வயிற்றில் பிறந்த வாலியும் சுக்ரீவனும் பெண்ணின் பொருட்டாகப் போரிட்டுக் கொள்கின்றனர் இக்காட்சியைக் கம்பர் சுந்தர்-உபசுந்தர் என்ற ஒரே தாய் வயிற்றில் பிறந்தோர் திலோத்தமையின் பொருட்டு போரிட்டுக் கொண்ட காட்சிக்கு ஒப்பிட்டு விளக்குவார்.

*தம்தோள் வலிமிக் கவர்தாம் ஒரு தாய்வ யிற்றில்*
*வந்தோர் மடமங் கைபொருட்டும லைக்க லுற்றார்*
*சிந்தோடு அரிஉண் கண்தி லோத்தமை காதல் செற்ற*
*சுந்தோ பசுந்தப் பெயர்த்தொல்லையி னோரும் ஒத்தார்*

என்ற கம்பராமாயணப் பாடலால் அக்காட்சியைக் காணலாம்.

குற்றாலக் குறவஞ்சியில் திரிகூடராசப்பக் கவிராயர்,

*மேடையில் நின்றொரு பஞ்சவர் ணக்கிளி*
*மின்னார்கை தப்பிஎன் முன்னாக வந்தது*
*பேடைஎன் றே அதைச் சேவல் தொடர்ந்தது*
*பின்னொரு சேவலும் கூடத் தொடர்ந்தது*
*கூடிய இன்பம் இரண்டுக்கும் எட்டாமல்*
*சுந்தோப சுந்தர்போல் வந்த கலகத்தில்"...*

என்ற பாடலில் கம்பனின் உவமையைக் கவினுற பயன்படுத்துவதைக் காணலாம். ஒரு பஞ்சவர்னக்கிளியைத் தொடர்ந்து சென்ற இரு ஆண்கிளிகள் கருதி வந்த இன்பம் இரண்டுக்கும் கிட்டாத காரணத்தால், போரிட்டுக் கொண்டு பின் ஓடி விடுகின்றன இக்காட்சி சுந்தர்-உபசுந்தர் திலோத்தமை என்னும் பெண்ணுக்காக சண்டையிட்டு மடிந்த நிகழ்ச்சி போலிருக்கிறது என்று ஒப்பிடுவது சிறப்பாக அமைந்துள்ளது.

நம் கவிராயர் தமக்கு முன்பு எழுந்த இலக்கியங்களையும் அவற்றின் கருத்துப் பிழிவுகளையும் தம் படைப்புக்களில் பயன்படுத்திக் கொண்டது போலவே அவர் தம் காலத்துக்குச் சற்று முன் எழுந்த முக்கூடற் பள்ளு போன்ற இலக்கியங்களில் பயின்று வந்த சுவைக் கூறுகளையும் அவர் பயன்படுத்திக் கொண்டார். அதைப் போலவே அவருக்குப் பின் வந்த குறவஞ்சிப் புலவர்கள் பலரும் அவரைத் தம் வழிகாட்டியாகக் கொண்டனர் எனலாம்.

*மீனாட்சியம்மை குறம் போன்ற சில நூல்கள் குற்றாலக் குறவஞ்சிக்கு* முன் தோன்றிப்புகழ் பெற்றன. மீனாட்சியம்மை குறத்தில் வரும் குறத்தி,

> *''திங்கள் முடி சூடும் மலை தென்றல்*
> *விளையாடும் மலை''*

என்று பொதிய மலையைப் புகழ்ந்துரைப்பது போலவே குற்றாலக் குறவஞ்சியும் வசந்த வல்லியிடம் குற்றால மலையின் சிறப்பினை உயர்த்திப்பாடுகிறார்.

## தொழில் திறமை

முக்கூடற்பள்ளில் வரும் வடிவழகக்குடும்பன் திருமால் முக்கூடலில் எழுந்தருளிய காலத்தில் இருந்து அவருக்குத் தொண்டு செய்து வரும் தொல்குடியைச் சேர்ந்தவன் என்று தன் குடிப்பெருமை பாராட்டுகின்றான். உலகத்தார் உண்ணும் உணவு தன் வேளாண்மையால் விளைந்தது என்றும்

> *''மைக்கடல் முத்துக்கீடாய்*
> *மிக்க நெல்முத்து உண்டாக்கும்*
> *வடிவழகக்குடும்பன் நானே''*

(பாடல்-122)

என்று தன்னை, 'நெல்மணிகளின் பிரம்மா' என்று பெருமை பேசுகின்றான். இவ்வாறே குற்றால குறவனாகிய சிங்கனும் தன் வேட்டைத் தொழிலின் நுணுக்கத்தைக்,

''கண்ணி குத்தி வேட்டை ஆடி நாய் போல் தடங்கண்டுபிடித்து பூனை போல் பதுங்கியிருந்து நரி போல் ஒதுங்கியிருந்து பேய் போல் தொடர்ந்து சிங்கம் போல் பாய்ந்து அடிக்கின்ற திரிகூடச் சிங்கன்'' என்று தன் தொழில் திறமையைப் புலப்படுத்துகின்றான்.

நொண்டி நாடகத்தில் வரும் கள்ளனும் இவ்வாறே தன் குலத்தொழிலில் தனக்குள்ள திறமையைப் புலப்படுத்துவதை,

> *''புலி பாய்ச்சல் பாய்வது போல், சூதும்*
> *பொய்யும் களவும், புரட்டும், உருட்டும்,*
> *கலி கால கற்பனையால் எல்லாம்*
> *கற்றறிந்தேன், பேரும் பெற்றிருந்தேன்*
> *செறிந்த திருடருக்குள் என்போல்*
> *தீர்க்கமும் மார்க்கமும் யார்க்கும் உண்டோ''**

என்ற பாடலால் அறியலாம்.

---

குறவஞ்சி இலக்கியம் - மேற்கோள் - முனைவர் நிர்மலாமோகன், பக். 122

திரிகூடராசப்பக் கவிராயர் காலத்துக்கு முந்தைய காலக்கட்டத்தில் தோன்றிய முக்கூடற்பள்ளும் அடுத்துத் தோன்றிய அவரது திருக்குற்றாலக் குறவஞ்சியும் பின்னர் தோன்றிய திருச்செந்தூர் நொண்டி நாடகமும் ஆகிய மூன்றும் இலக்கியங்களிலும் தலைமை மாந்தர்களாக முறையே பள்ளரும் குறவரும் கள்ளரும் படைக்கப்பட்டுள்ளனர். அவர்கள் அறிமுகமாகும் பொழுதே அவர் தம் சமயப்பற்று புலப்படுமாறு அமைக்கப்பட்டுள்ளனர்.

முக்கூடற்பள்ளில் வரும் வடிவழகக்குடும்பன் திருமாலின் திருவடியை எண்ணாதவர்களுடைய மனதை எல்லாம் தரிசு நிலமென்று கருதி கொழுப்பாய்ச்சி உழுவேன் என்றும் திருவாய்மொழிப் பாசுரங்களைக் கல்லாதவர்களை எல்லாம் இருகால்மாடுகளாக்கி ஏரிலே பூட்டித் 'தீத்தீ' என்று உழக்கோலால் சாத்தி ஓட்டுவேன் என்கிறான்,

*''ஒருபோ தழகர் தாளைக்*
*கருதார் மனத்தை வன்பால்*
*உழப் பார்க்குந் தரிசென்று*
*கொழுப் பாய்ச் சுவேன்*
*திருவாய் மொழி கல்லாரை*
*இருகால்மா டுகளாக்கித்*
*தீத்தீயென் றுழக் கோலால்*
*சாத்துவேன்!''*

என்று தம்முடைய சமயப் பற்றை அவன் புலப்படுபத்துவதைக் காணலாம்.

முக்கூடற்பள்ளில் வரும் வடிவழகக்குடும்பனைப் போன்றே குற்றாலக் குறவனான சிங்கனும், ''சிவபெருமானின் திருநீற்றினை அணியாதவர்களுடைய கைகளின் நரம்பினை வெட்டியெடுத்துக் கின்னரம் என்னும் யாழிலே நரம்பாகத் தொடுத்து அந்தப் பாதகர் தோலினால் பலவகைத் தவில்களைச் செய்து அவற்றை அடித்துக் கொண்டே பறவைகளைப் பிடிக்கின்ற குறவனும் நானே'' என்று தன்னைத் தானே அறிமுகப்படுத்துவதிலிருந்து அவனது சைவசமயப்பற்றை அறியலாம்.

இதைப்போலவே திருச்செந்தூர் நொண்டி நாடகத்தில் வரும் கள்ளனும், 'முருகன் பெயரை எப்பொழுதும் உச்சரித்துக் கொண்டிருப்பேன். திருச்செந்தூர் முத்தையனை வணங்காதவர்களைக் கேலி பண்ணிச் சிரிப்பேன். முருகனைப் போற்றி வணங்குவேன். அவ்வாறு வணங்காதவர்களாகிய துச்சாதனர்களை வெறுப்பேன்' என்று உரைப்பதை,

*"முருகன்பேர் நாவிலுச் சரிப்பேன்-செந்தில்*
*முத்தையனை வணங்காரைக் கேலி பண்ணிச் சிரிப்பேன்*
*ஆறெழுத்தை மாத்திரஞ் செபிப்பேன் அந்த*
*அச்சரத்தை யுச்சரியாத் துச்சனரை வெறுப்பேன்"*

எனும் பாடலால் அறியலாம். எனவே தாம் சார்ந்த மதக் கொள்கைகளில் உறுதியும் அக்கொள்கைகளில் இருந்து மாறுபட்டவர்களை வெறுத்துத் தண்டிக்க விரும்பும் போக்கையும் காணலாம்.

# நிறைவுரை

திரிகூடராசப்பக் கவிராயர் பதினெட்டாம் நூற்றாண்டின் சிற்றிலக்கியங்களின் முடிசூடா மன்னர்; அவர் படைப்புக்கள் பதினைந்தில் ஒன்பதே அச்சேறியுள்ளன. பிற ஆறு ஏடுகள் கிடைக்கவுமில்லை. பதிப்பிக்கப் பெறவுமில்லை. கற்போர்க்குக் களிப்பூட்டும் அவரது நூல்கள் இன்றும் இளைஞர்களால் விரும்பி படிக்கப் பெறுகின்றன. இலக்கியப் புலவராகவும், நாடக ஆசிரியராகவும் சைவமும், தமிழும் போற்றும் இலக்கிய வாணராகவும், சமய நல்லிணக்கத்தை வலியுறுத்தும் சான்றோராகவும், சமுதாய மறுமலர்ச்சிக்கு வித்திட்ட மக்கள் கவிஞராகவும், தமிழ்ப்பண்பாட்டைப் போற்றும் மேதையாகவும் அவர் விளங்குவதனை அவர் நூல்கள் நமக்கு நன்கு படம் பிடித்துக் காட்டுகின்றன. சொற்களை எளிய முறையில் இணைத்து அவற்றிற்குக் கலைவடிவிலான ஒருங்கிணைப்பை உருவாக்கிச் சேர்த்துச் சுவையூட்டி மறக்க விடாமல் செய்யும் மாண்புடைய பாவலரான திரிகூடராசப்பர் பாடல்கள் என்றென்றும் நிலைத்து நிற்கக்கூடியவை; நெஞ்சில் இனிப்பவை.

படைப்புத்திறன் பெறவிழையும் தற்காலக் கவிஞர்கள் கற்றறியத்தக்க பல்வேறு உத்திகளைத் தம் நூல்களில் பொதிந்து வைத்துள்ள அவர் நூல்களை இளைஞர்கள் போற்றிக் கற்க வேண்டியது இன்றியமையாதது.

தமிழ்ப்பற்றும் நாட்டுப்பற்றும் மிகுந்த திரிகூடராசப்பக் கவிராயர் தம் தமிழ்ப் பற்றினையும், நாட்டுப் பற்றினையும் அவர்தம் படைப்புகளில் கண்டு மன நிறைவெய்தலாம்.

*''அருள்பெருக மென்மே வறம்பெருக வெங்கும்*
*பொருள் பெருகப் போதம்பெருகத் தெருள்பெருகச்*
*சாற்றுந் தமிழ் பெருகச் சைவநெறி பெருக*
*நாற்றிசையில் தென்பால் நலம் பெருக''*

(திருக்குற்றால நாதருலா-112-115)

# திரிகூடராசப்பக்கவிராயர் வழித்தோன்றல்கள்

1. திரிகூடராசப்பக் கவிராயர் (இரண்டு மகன்கள்)

2.1 பண்டாரக் கவிராயர் - 2.2 சின்னக்கண்ணுக் கவிராயர்

3. வைத்தியலிங்கக் கவிராயர்(சின்னக்கண்ணுவின் மகன் பண்டாரக் கவிராயருக்குத் தத்துமகன்)

4. சுப்பிரமணிய கவிராயர் - (ஒன்பது மகன்கள்)

5.1 இராசப்பக் கவிராயர்

5.2 வைத்தியலிங்கக் கவிராயர்

5.3 சுப்பிரமணிய தேசிகர் (திருவாவடுதுறை 16 வது சன்னிதானம்)

5.4 சபாபதிக் கவிராயர்

5.5 திரிகூடராசப்பக் கவிராயர்

5.6 சொக்கலிங்கக் கவிராயர் (இரண்டு மகன்கள்)

5.7 சிவஞானக்கவிராயர்

5.8 சண்பகக் குற்றாலக்கவிராயர்

5.9 மந்திரக் கவிராயர்

6.1 சுப்பிரமணிய கவிராயர் (வேல்ஸ் இளவரசரிடம் கிலத்துப் பரிசுப் பெற்றவர்)

6.2 வைத்தியலிங்கக்கவிராயர்

7. சொக்கலிங்கக்கவிராயர் (நான்கு மகன்கள்)

8.1 குத்தால லிங்கம்

8.2 சுப்பிரமணிய கவிராயர் (கல்லூரி முதல்வர்)

8.3 நமசிவாயம்

8.4 பாண்டியராஜ்

# துணை நூற் பட்டியல்

## மூல நூல்கள்

### திரிகூடராசப்பக் கவிராயரின் நூல்கள்


குற்றாலக் குறவஞ்சி - இராஜம். எஸ் (பதிப்பாசிரியர்) 5,தம்பு செட்டி தெரு, சென்னை-1 1960.

திருக்குற்றால ஊடல் - திருக்குற்றாலநாதர் கோயில், திருக்குற்றாலம். ஏழாம் பதிப்பு - 1963, எட்டாம் பதிப்பு - 1987, ஒன்பதாவது பதிப்பு - 2001

திருக்குற்றாலக் குறவஞ்சி - சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, ஏழாம் பதப்பு - 1963

திருக்குற்றாலக் குறவஞ்சி - திருக்குற்றாலநாதர் கோயில் திருக்குற்றாலம் ஏழாம் பதிப்பு - 1963 எட்டாம் பதிப்பு -1987 ஒன்பதாம் பதிப்பு - 2001.

திருக்குற்றாலக் குறவஞ்சி - பாரிநிலையம், சென்னை-1

திருக்குற்றாலக் கோவை - திருக்குற்றாலநாதர் கோயில், திருக்குற்றாலம். இரண்டாம் பதிப்பு - 1954

திருக்குற்றாலச் சிலேடை வெண்பா - டாக்டர் உ.வே.சா. பதிப்பு 1940, கலைமகள் வெளியீடு சென்னை.

திருக்குற்றாலச் சிலேடை வெண்பா - திருக்குற்றால நாதர் கோயில் வெளியீடு, திருக்குற்றாலம் இரண்டாம் பதிப்பு -1954

திருக்குற்றாலத் தல புராணம் - இரண்டாம் பதிப்பு - 1910, சாதாரண ஆண்டு ஆவணி மாதம்.

திருக்குற்றாலத் தல புராணம் - திருவாவடுதுறை ஆதீன வெளியீடு ஐந்தாம் பதிப்பு -1973

திருக்குற்றால நாதருலா - திருக்குற்றாலநாதர் கோயில், திருக்குற்றாலம். இரண்டாம் பதிப்பு - 1954

திருக்குற்றாலப் பரம்பொருள் மாலை - திருக்குற்றாலநாதர் கோயில், திருக்குற்றாலம், இரண்டாம் பதிப்பு - 1954.

திருக்குற்றால மாலை - திருக்குற்றாலநாதர் கோயில், திருக்குற்றாலம் ஏழாம் பதிப்பு - 1963, எட்டாம் பதிப்பு - 1987 ஒன்பதாவது பதிப்பு - 2001

திருக்குற்றால யமக அந்தாதி - திருக்குற்றாலநாதர் கோயில், திருக்குற்றாலம். இரண்டாம் பதிப்பு-1954

## துணை நூல்கள்

இலக்கியக் கலை - ஞானசம்பந்தன் அ.ச.,

இலக்கியக் கொள்கை - மொழிபெயர்ப்பு-குளோறியா சுந்தரமதி.

இலக்கிய மரபு - டாக்டர் வரதராசனார். மு

இலக்கிய வரலாறு - டாக்டர் வரதராசனார், மு. சாகித்திய அகாதெமி, பதினாறாம் பதிப்பு-2001

இலக்கிய வரலாறு - பேராசிரியர். சுப்பிரமணிய பிள்ளை. கா

இலக்கிய வரலாறு - பேராசிரியர், அருள்சாமி, மு.சு.,

இராமலிங்க சுவாமிகளின் திருவுள்ளம் - திரு.வி.க

கல்விக் கழகக் கட்டுரைத் திரட்டு

கலைக்களஞ்சியம் - 4,5,7 ஆம் தொகுதிகள்

குறவஞ்சி இலக்கியம் - டாக்டர் நிர்மலா மோகன், மணிவாசகர் பதிப்பகம்-1985 சென்னை.

கோகிலாம்பாள் கடிதங்கள் - மறைமலையடிகளார்

சமூகவியலும் இலக்கியமும் - டாக்டர் கைலாசபதி, க. நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை-98

சிலப்பதிகாரம் - அடியார்க்கு நல்லார் உரை, டாக்டர் சாமிநாதையர்,உ,வே. பதிப்பு

சீவக சிந்தாமணி - உ.வே.சா. பதிப்பு

சேக்கிழார் சுவாமிகள் சரிதம் - பேராசிரியர் சுப்பிரமணிய பிள்ளை. கா

தமிழக வரலாறு மக்களும் பண்பாடும். - டாக்டர் கே.கே.பிள்ளை

தமிழ் இலக்கிய சரிதத்தில் காவிய காலம் - பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை

திருக்குறள் - பரிமேலழகர் உரை

திருக்குற்றாலத் தல வரலாறு - சண்முக நயினார் ஏ.சி.திருக்குற்றால கோயில் வெளியீடு, 6வது வெளியீடு 1962

திருக்குற்றாலநாத சுவாமி கோயில் வரலாறும் பண்பாடும் - சுப்பிரமணியகவிராயர்.சொ. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் சென்னை-113, 1998.

திருக்குற்றாலம் - பி.ஸ்ரீ.அமுத நிலையம் சென்னை-18 முதற்பதிப்பு-ஜூன் 1960

திருஞான சம்பந்தர் தேவாரம் - சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை.

திருத்தொண்டர் புராணம் - சேக்கிழார்

திருவாசகம் - மாணிக்க வாசகர், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. இரண்டாம் பதிப்பு -1968.

திருக்கோவையார் - மாணிக்கவாசகர், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. முதற்பதிப்பு-1970.

தொல்காப்பியம் - இளம்பூரணர் (உரை) பொருளதிகாரம் சென்னை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் - 1967.

தொல்காப்பியம் - பேராசிரியர் - உரை சென்னை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.

| | | |
|---|---|---|
| தொல்காப்பியம் மூலம் | - | சிதம்பர புன்னைவனநாத முதலியார், பதிப்பித்தது - 1922 துந்துபி ஆண்டு. |
| நன்னூல் | - | காண்டிகை உரை |
| நன்னூல் | - | சங்கர நமச்சிவாயர் உரை |
| பழந்தமிழர் இலக்கியத்தில் இயற்கை | - | டாக்டர் வரதராசனார், மு., பாரிநிலையம், சென்னை |
| புறநானூறு | - | அவ்வை துரைசாமி உரையாசிரியர், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1968 |
| புறநானூறு | - | உ.வே.சா.நூல் நிலையம் சென்னை ஏழாவது பதிப்பு - 1971 |
| புறப்பொருள் வெண்பா மாலை | | |
| பெரிய புராணம் | - | திரு.வி.க.உரையாசிரியர். |
| மதுரை நாயக்கர் வரலாறு | - | அ.கி.பரந்தாமனார், பாரிநிலையம் சென்னை-14-4-1981 |
| முக்கூடற்பள்ளு | - | பாரிநிலையம், சென்னை |
| முக்கூடற்பள்ளு | - | ஆறாவது வெளியீடு, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை. உரை ஆசிரியர் சோமசுந்தரனார், பொ.வே. |
| மீனாட்சியம்மை குறம் | - | சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை |
| முருகன் அருள் வேட்டல் | - | திரு.வி.க |
| மொழி வரலாறு | - | முனைவர் மு. வரதராசனார். |

திரிகூடராசப்பக்கவிராயர்: சிவபெருமானின் சீர்மிகு தொண்டராகிய இவர் சிற்றிலக்கியங்களை படைப்பதில் சிகரமாய் நின்றவர். குற்றாலநாதரின் புகழ்பாடும் குற்றாலக் குறவஞ்சி எனும் இசை நாடகக் கவிதை மகுடத்தைத் தமிழன்னைக்குச் சூட்டியவர். இயல், இசை நாடகமாகிய முத்தமிழுக்கும் தொண்டு செய்த புலவர். மற்ற புலவர்கள் எல்லாம் மன்னர்களையும் கடவுளர்களையும் பாடித் திரிந்த பொழுது மண்ணின் மைந்தர்களை பாடிய மக்கள் கவிஞர். தமிழ் மொழியில் வழிபாடு, தமிழ் வழிக் கல்வி என்ற தமிழ் கருத்தாக்கங்களுக்கு வித்திட்ட சமுதாயப் பாவலர் ஆகிய இவர் தமிழ் பண்பாட்டைப் போற்றும் சான்றோரும் ஆவார். சிவனின் திருவருள் நிரம்பப் பெற்ற இவரின் நூல்கள் முழுவதும் தெய்வ மணங் கமழ்வது வியப்பன்று.

ஆ. முத்தையா: வேளாண்மைக் குடும்பத்தில் பிறந்து, இளங்கலை, முதுகலைக் கல்வி வரை பயின்ற இவர் ஆனந்த விகடன் இதழியல் உத்திகள் எனும் தலைப்பில் ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்றார். தமிழக அரசு கலைக்கல்லூரிகளில் தமிழ்ப் பேராசிரியராக முப்பது ஆண்டுகள் பணிபுரிந்தார். பல நூல்களுக்கு ஆசிரியரான இவரது 'சல்லிக்கட்டு' எனும் நூலுக்கு தமிழக அரசு முதற் பரிசு நல்கிச் சிறப்பித்தது. சிங்கப்பூர், மலேசியா, தாய்லாந்து, இலங்கை போன்ற வெளி நாடுகளுக்கு சென்று வந்த இவர் தமிழ் வளர்ச்சி தொடர்பாக தொலைக்காட்சிகளில் சொற்பொழிவுகள், நேர்காணல்கள் போன்றன நிகழ்த்தி யுள்ளார்.

*Thirikooda Rasappa Kavirayar* (Tamil) Rs.25
ISBN - 81-260-2087-3